# ஹரிதாஸ ஹ்ருதய

## (பாகம் 6)

## மாக & பால்குண மாதத்திற்கான
## ஹரிதாச சிந்தனைகளின் தொகுப்பு

கன்னடத்தில் :

திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார்
பெங்களூரு

தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டவர்

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
89044 58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

# ஹரிதாஸ ஹ்ருதய
## (பாகம் 6)

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீப்ராணேஷ தாஸரின் ஆராதனை நாளான
02-10-2022 அன்று வெளியிடப்பட்டது.

ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

## பொருளடக்கம்

## முன்னுரை

ஹரிதாச சாகித்யம் ஆத்யாத்ம / லௌகிக வாழ்க்கையின் பொருள் ஆகியவற்றை விளக்குவதாக இருக்கிறது. ஆகவே இன்றுவரை அந்த சாகித்யம் அழியாமல் வருகிறது. உடலில் இருக்கும் இதயம் எப்படி ரத்தத்தை சுத்தமாக்கி நாம் வாழ வழி செய்கிறதோ, அது போல இந்த 'ஹரிதாச ஹ்ருதய' நம் இதயத்தில் இருக்கும் அழுக்குகளை சுத்தமாக்க உதவுகிறது. இதில் தினத்திற்கு ஒன்று என்று சிந்தனை இருக்கிறது. இதில் இருப்பது விஷயங்களின், தத்வங்களின் சாரம் / சுருக்கம் மட்டுமே.

ஹரிதாஸ ஹ்ருதய என்னும் இந்தப் புத்தகத்தை கன்னடத்தில் எழுதியவர் திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார் அவர்கள். ஒரு ஆண்டில் வரும் 360 நாட்களில், நாளுக்கு ஒன்று என மொத்தம் 360 சிறிய கட்டுரைகள் இதில் உள்ளன. சைத்ர & வைஷாக மாதத்தின் கட்டுரைகள் பாகம் 1ல் வெளிவந்தன. இந்த பாகம்-2ல் ஜ்யேஷ்ட & ஆஷாட மாதங்களின் கட்டுரைகள் உள்ளன.

ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள், பண்டிகை, விரத நாட்களில் – அந்தந்த ஹரிதாசர்களைப் பற்றி / பண்டிகை விரதங்களைப் பற்றி மற்ற ஹரிதாசர்கள் பாடிய குறிப்புகள் இதில் உள்ளன. மத்வ சித்தாந்தக் கருத்துகள் அனைத்தையும் பற்றியும் ஹரிதாசர்கள் பாடியுள்ளனர். அவை அனைத்தும் இந்தப் புத்தகத்தில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இந்த முழுப் புத்தகத்தையும் படித்தால், ஹரிதாசர்களின் கருத்துக்களின் வழியே, நம் மத்வ சித்தாந்த தத்வங்களை சுலபமாக அறியலாம்.

அனைவரும் இந்தப் புத்தகத்தை படித்து, அடுத்து வரவிருக்கும் பாகங்களையும் வாங்கிப் படிக்கவேண்டும் என்று விரும்புகிறோம். அனைவருக்கும் ஹரிவாயு குரு ஹரிதாசர்களின் அருள் என்றைக்கும் கிடைக்கட்டும் என்று ஸ்ரீஹரியிடம் வேண்டிக் கொள்கிறோம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**15-06-2022** **'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**மாக சுத்த ப்ரதிமை**

## என் நிலை இப்படி இருக்கிறது

பிறப்பு இறப்புகளின் சுழற்சியே வாழ்க்கை. ஜீவனுக்கு பஞ்சபூதங்களின் சம்பந்தம் ஆகிறது. ஜீவனின் வினைப்பயனுக்கு தக்கவாறு ஸ்ரீஹரி கொடுக்கும் நிலை இவை. இதுவே பிரச்னைகளின் பரம்பரை என்றனர். இதிலிருந்து தப்பிப்பதற்கு ஹரிவாயு குருகளின் அருள் தேவை. அதற்கே:

அனந்தகாலதல்லி யாவ புண்யதல்லி
என்ன மன நின்னலி எரகிஸு
என்ன மன நின்ன சரணதொளொம்மெ இட்டு
சலஹோ ரங்கவிட்டலா ‖ -- ஸ்ரீஸ்ரீபாதராஜர்

இப்படியாக வேண்டிக்கொண்டார். வாழ்க்கை என்றால் என்ன என்பதை கோபாலதாசர் விவரிக்கிறார். அனைவரும் அவசியம் தெரிந்திருக்க வேண்டிய விஷயம் இவை. வைராக்கியம் பெறுவதற்கான வழி இதுவே.

அனந்த அனந்த தேஹ அனந்த அனந்த ஜனும
அனந்த அனந்த பந்து அனந்த அனந்த பளக
அனந்த அனந்த சதி அனந்த அனந்த சுதரு
அனந்த அனந்த தாயி அனந்த அனந்த தந்தெ
அனந்த அனந்த பரியலி ஹீகெ புட்டி புட்டி
கன்ன பந்தனதொளகின்னு பெளெதெனய்யா
என்னதாவுதோ ஜாதி என்னதாவுது குலவு
என்னதாவுது கோத்ர என்னவராவரு
இன்னாதரு பிண்ட இன்னாரிகுதிஸிது
பன்னபவதொளு இன்னு ஹொரளி ஹொரளி
முன்ன நெலெய தாரியன்னு காணதெ போதெ
சின்னமய மூர்த்தி கோபாலவிட்டல
ஹுண்ணு ஹுண்ணாதேனு ஜனன மரணகளிந்த ‖ -- ஸ்ரீகோபால்தாசர்

இதில் வியப்பு என்னவென்றால் ஸ்ரீபுரந்தரதாசர் ‘சம்சாரவெம்பத பாக்யவிரலி’ என்றார். காரணம் மனிதப் பிறவி மட்டுமே சாதனை செய்வதற்கு உகந்தது என்பதால். இன்னொரு இடத்தில் இந்த சம்சாரத்தின் பிரச்னைகளை சந்திக்க முடியாமல், ஸ்ரீஹரி நீயே என்னை காப்பாற்று என்றார்.

சாகு சம்சார தெரெய நோகலாரெனு |
பேகு நின்ன சரணகமல பேரெ அன்யத்ர கதியகாணே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

**மாக சுத்த த்விதியை**

**பயம் எதற்கு?**

பொதுவாக பயம் உண்டாவது தனிமையினால். அப்படி பயம் இல்லாமல் இருக்கவேண்டும் என்றால், மிக சக்தியுடைய ஒருவன் என் பின்னால் இருக்கிறான், எப்போதும், எங்கேயும் என்னைக் காப்பாற்றுவான் என்னும் திடமான நம்பிக்கை தேவை. இந்த நம்பிக்கையை ராஜர் நமக்குக் கொடுக்கிறார்.

ஸ்ரீநாத ஸ்ரீகிருஷ்ண தானே நெனெவிகெ பந்தனல்லா
அந்து விஷ்ணு இந்து விஷ்ணு எந்தெந்து விஷ்ணு தானே
அத்த விஷ்ணு இத்த விஷ்ணு எத்தெத்த விஷ்ணு தானே
சர்வயக்ஞ சர்வசக்தி சாதுகதி விஷ்ணு தானே
ஸ்வப்னசுஷுப்தி ஜாக்ரதேலி விஷ்ணு தானே
ஒவினோவி மனதல்லி காவக்ருஷ்ணனிருதிரெ
ஆவாகலெல்லி ஹதாவபய நினகெ ஜீவ || -- ஸ்ரீவியாசராஜர்

எந்த காலத்திலும் நம்மைக் காப்பாற்றுபவன் அவனே என்றார் ஜகன்னாததாசர். காரணம் அவன் உள்ளும் புறமும் அனைத்து இடத்திலும் நிலைத்து ஸ்வதந்த்ரனாக அனைத்தையும் கட்டுப்படுத்துகிறான். அவரின் வாக்கு இதுவே:

ஹிந்தெ முந்தெட பலதி ஔஹொர இந்திரேஷனு தன்னவர
நெந்தெந்து சலஹுவனு ஆகஸதொலித்த நோடிதரு || (2-24)

தாசர் பற்பல விதங்களில் நமக்கு தைரியத்தைக் கொடுத்து, அவன் இருக்கும் பயம் எதற்கு? என்று பூரண நம்பிக்கையைக் கொடுக்கிறார்.

ஒடல நௌலந்ததலி ஹரி நம்மொடனெ திருகுவனொந்த அரெக்ஷண
பிடதெ பெம்பலனாகி பக்தாதீன நெந்தெனிஸி || (2-25)

ஸ்ரீஹரி சாமான்யருக்கும் புரியுமாறு உதாரணங்களினால், ஸ்ரீஹரி அனைவரையும் காப்பாற்றுபவனாக, நமக்கு ஏற்படும் பயத்தை தீர்ப்பவனாக இருக்கிறான். பயப்படாதீர்கள், தைரியமாக இருங்கள் என்றார்.

கண்ணிகெவெயெந்ததலி கை மைதிண்ணிகொதகுவ தெரதி பல்களு
பண்ணு பலகளனகிது ஜிஹ்வெகெ ரசவனீவந்தெ ||

'எந்த சுலபனோ நீனு ஸ்ரீகிருஷ்ண சிந்தெ மாடுவரிகெல்ல' என்று ராஜர் கூறிய ஸ்ரீஹரியில் நம்பிக்கை வைத்து, ஹரிதாசர்கள் எடுத்துக்கொடுத்த வழியில் நடந்தால் பயம் எதற்கு?

**மாக சுத்த த்ருதியை**

## எதிரிகள் தேவை

உலகில் பலர் தம்மை புகழ்பவர்களை எப்போதும் அருகிலேயே வைத்திருப்பர். ஆனால் தாசர் இங்கு நமக்கு ஒரு எச்சரிக்கை விடுக்கிறார். 'நிந்தகர் இரபேகு' - நம்மை குறை சொல்பவர்கள் இருக்கவேண்டும். சஜ்ஜனர்கள் என்றும் துர்கதி அடையக்கூடாது என்பதே தாசரின் நோக்கம். சாத்விகர்கள் வாழ்க்கையில் ஏதாவது கெட்ட செயல்களை செய்தாலோ, மற்றவர்களிடம் திட்டு வாங்கும் படியாக நடந்துகொண்டாலோ, அதை திருத்திக்கொள்ளும் ஒரு வாய்ப்பாக எடுத்துக் கொள்கின்றனர். இதையே ஸ்ரீபுரந்தரதாசர்:

சென்னாகி பெய்தென்ன தன்யன மாடிரோ
மன முட்டி பெய்யிரோ || -- என்று வேண்டுகிறார்.

நிந்தகரிரபேகு - ஹந்தியித்தரெ கேரி ஹ்யாங்கே ஷுத்தியோ ஹாங்கே ‖ இங்கு துர்ஜனர்களை பன்றி என்றும் சொல்லும் தாசர், மேலும்: நா மாடிதஷ்டு பாபவன்னு அளெது ஹாகி ஹஞ்சிகொள்ளிரோ ‖ என்று சமாதானம் சொல்கிறார். நம் பாவ புண்ணியங்களை தாசர் அளக்கும் விதம் வெகு சுவாரஸ்யமானது.

அந்தந்து மாடித பாபவெம்ப மல
திந்து ஹோலுவரய்ய நிந்தகரு |
வந்திஸி ஸ்துதிசுவ ஜனரெல்லரு நம்ம
பொந்தித புண்யவனொய்யவரய்யா ‖

இங்கு தாசர் சொல்ல வரும் விஷயம் இதுவே. புண்ணியம் செய்தால் அதை மறைத்து வைக்கவும். செய்த பாவங்களை அறிந்துகொண்டு, அவற்றை தவிர்த்து, சாதனை வழியில் முன்னேறவும். முத்தைப் போன்ற தாசரின் வாக்கு - 'துஷ்ட ஜனரு ஈ ஸ்ருஷ்டியொள் இத்தரே சிஷ்டஜனரிகெல்லா கீர்திகளு'. இங்கு துஷ்டர்களின் சுபாவங்களை தெரிவித்து, அவர்கள் சொல்லும் அனைத்தையும் புறக்கணித்து, நாம் சாதனை வழியில் செல்வோம்' என்கிறார்.

நினைவில் வைத்துக் கொள்ளவேண்டிய இன்னொரு விஷயம் என்னவெனில்:

நிந்திஸிதவரெல்ல நிந்த்யராகுவரு அபி
நந்திசுவ ஜனரு ஜகதொளு ஜனரிந்த
வந்த்யராகுவரு எந்தெந்து ‖ -- ஸ்ரீஜனன்னாததாசர்

**மாக சுத்த சதுர்த்தி**

**காலகாலக்கே சலஹய்யா**

நம் கண்ணுக்குத் தெரியாத, நம் பேச்சைக் கேட்காத பொருள் - காலம். அனாதி காலத்திலிருந்து அனந்த காலம் வரை இருக்கும் ஒரு அற்புதம் மற்றும் ஆச்சரியம். க்ஷணம், நொடி, நிமிடம், நாழிகை, நாள், மாதம், ஆண்டு, யுகம், மனுகல்பம், பிரம்மகல்பம் (அல்லது மனித-காலம், தேவ-காலம்) என்று அழைக்கப்படுகிறது. இவை அனைத்தும் காலமே ஆகும். நேற்று இன்று நாளை என்று

காலம் செல்கிறது. இந்த அனைத்து காலங்களிலும் இருப்பவன் ஒருவனே. அவனே ஸ்ரீஹரி. அதற்காக அவனையே காலம் என்று அழைத்தனர். ஸ்ரீஜகன்னாததாசர்:

காலாஹ்வய மஹகால நியாமக
காலாதீத த்ரிகாலக்ஞ
கால ப்ரவர்த்தக கால நிவர்த்தக
காலோத்பாதக காலமூர்த்திதவ ।
தாசோஹம் தவ தாசோஹம் ॥ -- ஸ்ரீஜகன்னாததாசர்

காலநாமகனான ஸ்ரீஹரியைக் குறித்து ஸ்ரீவிஜயதாசர் பாடியது:
காலநாமக பகவந்த நின்னய பீதி
காலநாமகளாத துர்கெகே
காலாக்ய கருடசேஷருத்ரரிகெ துர்கெ பய
கால பய யதுகிவர பய யமன பீதி
காலனெம்போ யமன தம்மனிகெ யாகுவுதோ
கால ம்ருத்யுவிகெ ஈ காலன பய
காலதூதரிகெ பய மிவரிந்தாகுவது க்ஷுத்ர
கால தேவதெகளிகெ தூதர பய
கால காலகெயிரலி ஸ்வதந்த்ரதலி லேஷ
காலவாதரோ நரன முட்டுவாரே
கால நியாமக நின்ன நம்பலு சர்வ
காலதலி சுகவுண்டு நிரோகதி
கால தேவதா பூர்ண விஜயவிட்டல நின்ன
காலிகெ யெரகுவெனு கரவிடிது சலஹோ ॥

இந்த காலத்தைக் கண்டு பயப்படாமல் இருக்க தாசர் கூறிய நற்செய்தி இதுவே.

கால காலக்கெ நின்ன நாம ஸ்மரணெயனு
நாலிகெகெ கொடு கண்ட்ய நாராயணனெ ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

**மாக சுத்த பஞ்சமி**

## கருணைக்கடல் ஸ்ரீஹரி

எதையும் எதிர்பார்க்காத நண்பன், உதவி செய்பவன், தயாமயன், பக்தர்களின் அபராதங்களை சகித்துக் கொள்பவன் - ஸ்ரீஹரி.

யாரிடமிருந்தும் எப்போதும் எதையும் வேண்டாதவன். ஸ்வதந்திரன். புருஷோத்தமன். இதையே ஸ்ரீவிஜயதாசர்:

நித்ய த்ருப்தனு நீனு நித்யானந்த நீனு
நித்ய பூஷித நீனு நித்யா நிர்மல நீனு
நித்ய வ்யாபக ... நித்ய மங்கள நீனு
நித்ய முக்தாஸ்ரய விஜயவிட்டல சதா ||

இத்தகைய ஸ்ரீஹரியை, ஜகன்னாததாசர், கருணாமயி – பக்தவத்ஸலன் என்றார்.

ப்ரதிதிவச தன்னங்க்ரிசேவா
ரத மஹாத்மரு மாடுதிஹ சம்
ஸ்துதிகெ வஷனாகுவ இவன காருண்யகேனெம்பே ||

'மனவனித்தரே தன்னனீவனு'. நமக்கு நல்ல சிந்தனைகளைக் கொடுப்பவனும் அவனே. 'லட்சுமிவல்லபனு ப்ரணதரனு காயிதி ஹனு நிஷ்காமனதி' என்று வர்ணிக்கிறார். இத்தகைய சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனான பகவந்தனின் காருண்யத்தை மேலும் வர்ணிக்கிறார்.

ஏனு கருணாநிதியோ ஹரி ம
த்தேனு பக்தாதீனனோ இ
ந்னேனு ஈதன லீலே இச்சாமாத்ரதலி ஜகவ |
தானே ஸ்ருஜிசுவ பாலிசுவ நி
ர்வாண மொதலாதகில லோக
ஸ்தானதலி மத்தவரனிட்டானந்த படிசுவனு || (2-16)

'ஸ்மரிசுவவரபராதகள தா ஸ்மரிஸ சகலேஷ்ட ப்ரதாயக' ஸ்ரீஹரி. அதற்கே இவனை பக்தவத்ஸலன் என்றார். அவனே 'கருணைக்கடல்' என்றார். மேலும்:

ஹிந்தே முந்தெடபலதி ஔஹொரகி
ந்திரேசனு தன்னவரனெந்தெந்து சலுஹவனு ||

ஒடல நௌலந்ததலி ஹரி நம்மொடனெ திருகுவனொந்தரெக்ஷண பிடதே பெம்பலனாகி பக்தாதீன நெந்தெனிஸி || என்றார்.

இத்தகைய கருணாமூர்த்தியானவன் ஸ்ரீஹரி. மகாவிஷ்ணுவின் வக்ஷஸ்தலத்தில் (மார்பில்) துர்வாசர் உதைத்தபோதும், அவரை மன்னித்து மரியாதை அளித்தவன். பிறகு அவரே விஷ்ணுவை சர்வோத்தமன் என்று புகழ்ந்தார். அனைத்து குணங்களிலும் கருணைக் குணமே மிகச் சிறந்ததாகும்.

**மாக சுத்த சஷ்டி**

**சுலபனோ ஸ்ரீஹரி**

அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகன், சர்வதந்த்ர ஸ்வதந்திரன், புருஷோத்தமன், ஸ்ருஷ்ட்யாதி அஷ்டகர்த்ருத்வ, படைத்தல் முதலான அனைத்து செயல்களையும் செய்பவன் என அனைத்தும் ஆன ஸ்ரீஹரி எப்படி இருப்பான்? இவனைக் காண்பது சாத்தியமா? இவரை அடைவது சுலபமா என்றெல்லாம் கேள்விகள் வருகின்றன. 'சுலபனோ ஹரி' என்று இதற்கே சொல்கிறார். எதையும் எதிர்பார்க்காத நண்பன். பக்தவத்ஸலன் என்று அனைத்து குணங்களையும் சேர்த்து சொல்ல வேண்டுமெனில், ஸ்ரீஹரி 'கருணைக் கடல்' எனலாம். அனைத்து சாஸ்திரங்களும் ஒருமித்த கருத்தாக சொல்வது இதையே. ஹரிதாசர்களும் இதையே திரும்பத்திரும்ப பாடிப் புகழ்கின்றனர்.

ப்ரதிதிவஸ தன்னங்க்ரி சேவாரத மகாத்மரு மாடுதிஹ சம்
ஸ்துதிகெ வஷனாகுவனிவன காருண்ய கேனெம்பே || -- ஜகன்னாததாசர்

கருணை என்னும் சிறந்த குணம் ஸ்ரீஹரிக்கு மட்டுமே உரித்தானது. அதற்கே ஸ்ரீமதாசார்யர், அவனிடம் எதை சமர்ப்பித்தாலும், அது 'அக்ஷயம்' ஆகிறது என்றார்.

அக்ஷயம் கர்ம யஸ்மின் பரே ஸ்வர்ப்பிதம் - என்றார். மரளி தனகர்ப்பிஸலு கொட்டுதனந்த மடி மாடி - என்றார். பிரம்மா முதலானவர்களாலும் ஊகிக்க முடியாத நற்குணங்களைப் பெற்றவன் ஸ்ரீஹரி. இத்தகைய ஸ்ரீஹரியை அறிவதற்கு, தரிசனம் செய்வதற்கு, மகிழ்ச்சிப் படுத்துவதற்கு ரமா பிரம்மாதிகளாலும் சாத்தியம் இல்லை. இவ்வளவு இருந்தாலும், நம் ஸ்ரீஹரி ஒரு கருணைக்கடலே என்று பாடுகிறார் ஸ்ரீஜகன்னாததாசர்:

சுலபனோ ஹரி தன்னவரனரெகளிகெ பிட்டலகலனோ ரமாதவ
ந ஒலிசலரியதே பாமரரு பளலுவரு பவதொளகே || என்றார்

ஸ்ரீபுரந்தரதாசர் சொல்வது: ஸ்ரீஹரியை அடைவது எவ்வளவு சுலபம் என்றால்:

மலகி மாடிதரெ குளிது கேளுவனு
குளிது பாடிதரெ நிந்து கேளுவனு
நிந்து பாடிதரே நலிது கேளுவனு
நலிது பாடிதரெ ஸ்வர்க சூரெபிட்டே எம்ப புரந்தரவிட்டலா ||

தன் பக்தர்கள் செய்யும் அபராதங்களை சகித்துக் கொள்பவன் ஸ்ரீஹரி. 'மனவனித்தரே தன்ன நீவனு' என்னும்படியான கருணை. ஜகன்னாததாசர் மேலும்:

ஏனு கருணா நிதியோ ஹரி ம
த்தேனு பக்தாதீனனோ இன்னேனு ஈதனலீலே. என்று கொண்டாடினார்.

இத்தகைய சுலபனான ஸ்ரீஹரியின் அருளைப் பெறும் நற்புத்தி வரட்டும். இத்தகைய புத்தி இல்லாதவர்கள் இருந்தால் என்ன இல்லாவிட்டால் என்ன?

**மாக சுத்த சப்தமி**

**மத்வ அவதாரத்தின் பின்புலம்**

தத்வவாதத்தை பரப்பி சஜ்ஜனர்களுக்கு உண்மையான ஞானத்தை கொடுப்பதற்காகவே அவதரித்தவர் ஸ்ரீமதாசார்ய மத்வர். இவரின் அவதாரத்திற்கு முன், பாரதத்தில் பல வழிகள், பாஷ்யங்கள் இருந்தன. அவற்றில் இருந்த தோஷங்கள் அனைத்தையும், ஆகமங்களுக்கு எதிராக இருந்த வாதங்களை கண்டித்து, சத்-சித்தாந்தத்தை மறுபடி நிறுவியவர் ஸ்ரீமதாசார்யரே. இவருக்கு முன்னர் இருந்த மதாசார்யர்களின் கருத்துகளை, ஸ்ரீவிஜயதாசர் தொகுத்து, மிகவும் அழகாக தமது கிருதியில் கொடுத்துள்ளார்.

ஹரியு குணசூன்ய ஹரியு நிராகார
ஹரியு தொரெயு அல்ல ஹரி பரதந்த்ர

ஹரியு துர்பலனு ஹரிகெ எண்டு குண
ஹரியு தானெந்து தாரதம்யவெனதெ
தரெகெல்லா மித்யா பரிபரி கர்மகளு
ஹரிதானே புட்டி சரிசுவ லீலெயலி
நர நானா ஜன்மதரிஸி தோருவனெந்து
மருள துர்மதத்தவரு சரிசரி பந்தந்தெ
வரலி சஜ்ஜனரன்னு திரஸ்காரவனெ மாடி
திருகுதிரெ இத்த சுரரு களவளிஸி
பரமேஷ்டிகெ பேளி ஹரிகெ பின்னெயிசலு
மருததேவனெ அவதரிஸித ஹருஷதலி
கருணாகரமூர்த்தி விஜயவிட்டலரேய
பரனெந்து சாரி தரெயொளகெ மெரெதா || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீமதாசார்யரின் அவதாரத்தின் பின்புலத்தை அறிந்தால் மட்டுமே, அவரது அவதாரத்தின் சிறப்பு / நோக்கம் புலப்படும். இது சுமத்வவிஜயத்தில் மிகவும் விளக்கமாக சொல்லப்பட்டிருக்கிறது. வேத, இதிகாச, புராணங்களின் உண்மையான பொருளை மறைத்து, தமதே ஆன துர்பாஷ்யங்களை பிரசாரம் செய்து அனைவரையும் துயரத்தில் ஆழ்த்தினர். இங்கு தாசர், துர்மதங்கள் பரப்பிய் விஷயங்களை, சில வரிகளிலேயே தொகுத்துக் கொடுத்திருப்பது மிகவும் அழகாக இருக்கிறது. ஸ்ரீஹரியின் ஆணை, பிரார்த்தனை மற்றும் சஜ்ஜனர்கள் மேல் அவருக்கு இருக்கும் கருணையினால், வாயுதேவர் தரையிறங்கி வந்து மத்வராக அவதரித்து அனைவரையும் காத்தார். ஸ்ரீஹரியின் மகிமைகளை புகழ்ந்து, துர்-மதங்களைக் கண்டித்தார்.

**மாக சுத்த அஷ்டமி**

## வாயுதேவர்

உலகத்தில் இந்த ஜீவர்களுக்கு யார் நெருங்கிய நண்பர் என்றால், யார் எப்போதும் அவருடன் இருந்து, அவர்களை வாழவைக்கி றார்களோ அவரே எனலாம். அனைத்து ஜீவர்களிலும் இருந்து, சுவாஸ ஜெபங்களை செய்து, அவர்களை வாழவைக்கும் வாயு தேவரே என்று சாஸ்திரங்கள் அவரை புகழ்கின்றன.

நித்யம் ஹீனோSகிலய்தோஷே: சாரரூபோ யதோ ஹரி: |
ஹம்ஸ இத்யுச்யதே தஸ்மாத்வயுஸ்த: ஷுசிஷன்மத: ||

ஹம்ஸ நாமக ஸ்ரீஹரியை வாயுதேவர், ஜீவர்களுக்குள் இருந்து தினந்தோறும் 21,600 மந்திரங்களை ஜெபித்து, அவர்களுக்கு வாழ்க்கையைக் கொடுக்கிறார்.

ஸ்தூலதேஹதொளித்து வருஷகெ
ஏளதிக வெப்பத்து லக்ஷத
மேலெ எப்பத்தாருசாவிர ஷ்வாஸஜபகளனு |
காளிதேவனு கருணதலி ஈ
ரேளு லோகதொளுள்ள சேதன
ஜாலதொளு மாடுவனு த்ரிஜகத்வியாப்த பரமாப்த || (12-43)

அனைத்து ஜீவர்களுக்கும் இருப்பது நான்கு தேகங்கள். ஸ்வரூப தேகம், லிங்க தேகம், அனிருத்த தேகம் மற்றும் ஸ்தூல தேகம். அனைத்து தேகங்களிலும் நிலைத்திருக்கும் வாயுதேவர், மூன்று வித ஜீவர்களிலும் தினமும் 21,600, இதுவே நான்கு தேகங்களில் 86,400 ஜெபங்களை செய்து ஸ்ரீஹரிக்கு அவற்றை அர்ப்பிக்கிறார். இதையே ஜகன்னாததாசர்:

ஈரெரடு தேஹகளொளித்து ச
மீரதேவனு ஷ்வாஸஜப நா
நூரதிகவாகிப்ப எம்பத்தாரு சாஹஸ்ர |
தா ரசிசுவனு திவஸ ஒந்தகெ
மூருவித ஜீவரொளகித்து க
ராரி கருனாபலவதெந்துடோ பவனராயனொளு || (12-44)

இத்தகைய வாயுதேவரை, த்ரிவிக்ரம பண்டிதர் ‘மாதர்மே மாதரிஸ்வன் பிதரதுலகுரோ ப்ராதரிஷ்டாப்த பந்தோ’ என்று புகழ்ந்திருக்கிறார். வாயுதேவர், சுரர்களுக்குள் இருந்து ‘ஹம்ஸ’ மந்திரத்தை சொல்லி, சத்குணங்களை அளித்தால், அசுரர்களில் இருந்து ‘சோஹம்’ மந்திரத்தை சொல்லி, அதோலோக கதியைக் கொடுக்கிறார். இதன் பலாபலன்கள் வாயுதேவருக்கு இல்லை. இது ஸ்ரீஹரியின் சேவை என்று நினைத்து செய்கிறார்.

மூன்று உலகங்களிலும் நிலைத்திருக்கும் வாயுதேவர், ஜீவர்களின் நண்பர். சஜ்ஜீவிகளுக்கு சாதனைகளை செய்வித்து, இறுதியில் ஸ்ரீஹரியிடம் அழைத்துப்போய், சத்கதியை அளிக்கிறார். இவரைவிட நண்பர் வேறு யார் இருப்பதற்கு சாத்தியம்?

வாயுதேவர், தமது மூன்று அவதாரங்களிலும் ஸ்ரீஹரி பக்தனாகி, பகவத் காரியங்களில் ஈடுபட்டு, தத்வவாதத்தை நிரந்தரமாக பரப்பி, சஜ்ஜனர்களை மேம்படுத்தும் ஜீவோத்தமரே ஆகியிருக்கிறார். அதற்கே இவரை 'த்ரிஜகத்வியாப்த பரமாப்த' என்றார்.

**மாக சுத்த நவமி**

## ஸ்ரீமத்வ நவமி

உலகத்தில் மக்களுக்கு உண்மையான ஞானத்தைக் கொடுக்க வென்றே அவதரித்து வந்தவர், ஸ்ரீமதாசார்யர். ஜீவோத்தமரான வாயுதேவரின் மூன்றாவது அவதாரமாக, ஸ்ரீஹரியின் ஆணைக் கேற்ப அவதரித்து வந்தவர். ஸ்ரீவியாசராஜரின் வாக்கு இது:

தரணி மண்டலதொளகெ பூமி சுரகணகெ சாஸ்த்ராம்ருதவ
எரெது ஸ்ரீகிருஷ்ணன இருவ தோரி வரபதரியொளு நிந்த தீர ||
என்றார்.

மத்வரின் ஸ்வரூபத்தை, ஸ்ரீவாதிராஜர் சொல்வது இவ்வாறு:
மருதம்ஷ மத்வமுனிரன்ன நினகெ
சரிகாணே ஜகதொளகெ சர்வரொளு பூர்ண || என்று வர்ணிக்கிறார்.

ஹனுமபீம மத்வமுனிராய
குணராம ஹரிபாத சேவெயொளகதிக ப்ரேம ||

'ஈதனெ காணிரோ மத்வமுனி' என்னும் உகாபோகத்தில் ராஜர், மத்வரின் காருண்யத்தைப் பற்றி சொல்வது இப்படி:

சகல ஆகமகளெம்ப ஷரதியொளகெ
யுகுதியிந்தலி முதிஸி
அகளங்க ஸ்ரீஹரியெம்ப ரத்னவ கண்டு
முகுட தொளிட்டு லோகதி மெரெதாத || -- ஸ்ரீவாதிராஜர்

மத்வ மதத்தைப் பின்பற்றுபவர்களான ஹரிதாசர்கள், ஸ்ரீஸ்ரீபாதராஜ ரிலிருந்து துவங்கி, பற்பல பத, பாடல்களினால், ஸ்ரீமத்வாசார்யரைப் போற்றி, புகழ்ந்து பாடியிருக்கும் பரம்பரை இருக்கிறது. மத்வரை பாடிப் புகழாத தாசர் இல்லை. இதற்கு முக்கிய காரணம் ஸ்ரீபாதராஜர்.

ஜயஜய ஜகத்ராண ஜகதொளகெ சுத்ராண
அகிலகுண சத்தாம மத்வ நாம ||

ஆஸ்விஜ சுத்த தசமி (விஜயதசமி) அன்று அவதரித்த சர்வக்ஞாசார்யர், மாக சுத்த நவமியன்று நம் கண்களிலிருந்து மறைந்து, ஸ்ரீவேதவியாசரின் சேவையில் இருக்கிறார். தம் சர்வமூல கிரந்தங்களில் மற்றும் சஜ்ஜனர்களின் இதய-மண்டபத்தில் எப்போதும் நிலைத்திருந்து, முக்திக்கு வழியான தத்வவாதங்களை பரப்பி வருகிறார். இவரின் வாதங்களின் சாரத்தை இப்படியாக வர்ணிக்கிறார்

ஸ்ரீஸ்ரீபாதராஜர்.
சர்வேஷ ஹரி விஷ்வவெல்ல தா புசியெம்ப
துர்வாதிகள மதவ நெரெ கண்டிஸி ||
சர்வேஷ ஹரி விஷ்வ சத்யவெந்தருஹித
சர்வாதி கீர்வாண சந்ததியலி ||

'மததொளு ஒள்ளே மதவு மத்வமதவு' என்ற புரந்தரதாசர், 'ஹரிய மதவே ஹனுமன மதவு' என்று கூறினார். மேலும்:

மத்வராயர நெனெது ஷுத்தராகிரோ
ஹொத்தி வைஷ்ணவ மதத பவாப்தி தாடிரோ || என்று போதித்தார்.

இதிர்யாரோ குருவெ சமர்யாரோ |
வேதசாஸ்திரகளிந்த மாயிகள கண்டிஸி
சாதிஸி ஹரிய சர்வோத்தமனெந்தெந்து
மோதபரிதராத திவ்யசாஸ்த்ரவ மாடித
மோததீர்த்த புரந்தரவிட்டலன தாச || -- ஸ்ரீபுரந்தரதாசர்

கலியுகதலி துரீயாஷ்ரமவனெ தரிஸி
கலுஷத மாயிகளனெ சோலிஸி

கிலவாத மத்வமதவனு பலிதெசனிஸி காகி
நெலெ ஆதிகேசவனெ பரதெய்வனெந்தவன ॥ -- ஸ்ரீகனகதாசர்

விஜயதாசர் நிர்ணயித்து சொன்ன வார்த்தை இப்படி:

மத்வராயர கருண படெயதவ
தரெயொளகெ இத்தரேனு இல்லதித்தரேனு ॥

மத்வமதவே மதவு சகல ஸ்ருதி சம்மதவு
மத்வராயர த்யான அம்ருதபான
மத்வராயர கதெயு கேளலது துரிதஹத
மத்வராயர பகுதி மாடே முகுதி
மத்வராயர ஸ்தோத்ர மாடிதவ சத்பாத்ர
மத்வராயர பஜனெ துஷ்கர்மத்யஜனெ
மத்வராயர பண்ட ஜகக்கெ நண்ட
மத்வேஷனா கருண படெதவனெ ஷரணா ॥ -- ஸ்ரீ விஜயதாசர்

ஆசார்ய மத்வரிடம் இதை வேண்டுங்கள் என்றார் ஸ்ரீகோபாலதாசர்.

சதத சன்மார்கத பதவனு தோரிஸி ।
கதியாகு தஷப்ரமதி முனிராய ।

**மாக சுத்த தசமி**

**ஹனும மத்வ பீம**

வாயுதேவரின் அவதாரத்ரய ரூபங்களே இந்த ஹனுமபீமமத்வர். வேத புராண இதிகாசங்களில் வர்ணிக்கப்பட்டு, புகழப்பட்ட ரூபங்கள் இவை. ஜீவோத்தமர். இவருக்கு என்றைக்கும் கலி பிரவேசம் இல்லை. வாயுவின் மூன்றாவது அவதாரமான மத்வர், வேத வாக்கியங்களை உதாரணம் காட்டி, சிஷ்யர்களுக்கு தன் ஸ்வரூபத்தை விவரித்துக் கொண்டார். ஹரிதாச சாகித்யங்களில் பல்வேறு கிருதிகளில் பல்வேறு விதமாக அவதார த்ரயங்கள் பாடப்பட்டுள்ளனர். ஸ்ரீமதாசார்யரின் சிஷ்யரிலிருந்து துவங்கி, வியாச - தாச சாகித்யத்தில், இந்த மூன்று ரூபங்களை சிந்தித்து

கொண்டாடியிருப்பதை பார்க்கிறோம். இதுவே சித்தாந்தத்தின் சாரம் ஆகும். ஸ்ரீபுரந்தரதாசர் சொல்வது இப்படி:
ஹனும பீம மத்வமுனிய நெனெது பதுகிரோ ।
அனுமானங்களில்லதலெ மனோபீஷ்டங்களீவ ॥

மேலும்:
அவதாரத்ரயகளிந்த ஸ்ரீஹரிய சேவிசுவ ।
தவகதிந்த பூஜிப மஹாமஹிமெயுள்ளவனு ॥
ப்ரதமதல்லி ஹனுமந்த த்விதியதலி கலிபீம ।
த்ருதியதல்லி குருமத்வமுனியு எனிஸி ।
ப்ரதி இல்லதலெ மெரெத புரந்தரவிட்டலன ।
பக்த நினகாரு சரி விஜய ஹனுமந்த ॥

இப்படி ஹரிதாச சாகித்யத்தில், அவதார த்ரயங்களை பாடியதோடு மட்டுமல்லாமல், ஒவ்வொரு அவதாரத்தையும் தனித்தனியாகவும் தமது பாடல்களில் பாடியிருக்கின்றனர். பரம்பரையில் வந்த ஒவ்வொரு தாசரின் பாடல்களும் கிடைக்கின்றன. சாகித்யத்தில் சிறு பாடல்களில் துவங்கி, பல நீண்ட கிருதிகளையும் பார்க்கிறோம். சாகித்யத்தின் அனைத்து விதங்களிலும் இவர்கள் புகழ்ப்பட்டிருப்பது மிகவும் அற்புதம். திடமான பக்தியையும் இதிலிருந்து காண்கிறோம். அனைத்தும் மத்வரே என்று புரந்தரதாசர் ஒரு இடத்தில் சொல்கிறார்.

ஹனும நம்ம தாயி தந்தெ
பீம நம்ம பந்து பளக
ஆனந்ததீர்த்தரே நம்ம கதி கோத்ரவய்யா ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

அனைத்து சாத்விகர்களுக்கும் குறிப்பாக மாத்வர் மனதில், இத்தகைய சிந்தனை நிரம்பியிருப்பது பார்க்கலாம். அதற்கே இவரை நம்பியவர் எப்போதும் கெட்டுப்போவதில்லை என்கிறார்.

அஞ்சிகென் யாதகய்யா சஜ்ஜனரிகெ ।பயவு இன் யாதகய்யா ।
சஞ்சீவராயர ஸ்மரணே மாடித மேலே ॥

ஆனெந்து துதிபெ நின்ன ஸ்ரீகுருரன்ன
ஆனெந்து துதிபெ பஞ்சானனசுத பவ
மான ஹனும பீம ஆனந்ததீர்த்தனே ॥ -- ஸ்ரீஜகன்னாததாசர்

**மாக சுத்த ஏகாதசி**

**மத்வநாமா**

ஸ்ரீபாதராஜரின் மிகப் பிரபலமான கிருதி - மத்வநாமா. கன்னட வாயுஸ்துதி என்றும் சொல்கிறார்கள். ஜீவோத்தமரான வாயுதேவரின் அவதார த்ரயங்களின் லீலைகளை மிகவும் அழகாக காவிய ரூபத்தில் வர்ணிக்கிறார். மந்திர துல்யமாக, அனைவருக்கும் வேண்டியதை கொடுக்கும் துதியாக இருக்கிறது

மத்வநாமா. 'வாயும் வினா நைவ ஸ்திதிர் ஹரேஸ்ஸதா' ஸ்ரீஹரி எப்போதும் வாயுதேவரின் கூடவே இருக்கிறார். சத்கதியை வேண்டுபவர்களுக்கு, ஹரிவாயுகளின் அருள் மிகவும் அவசியம் மற்றும் கட்டாயம்.

ஜய ஜய ஜகத்ராண ஜகதொளகெ சுத்ராண
அகிலகுண சத்தாம மத்வநாமா ||

ஸ்ரீபாதராஜர் வாயுதேவரின் மகிமைகளை வர்ணித்து, பிறகு தனித்தனியாக ஹனும பீம மத்வரை புகழ்ந்து பாடியிருக்கிறார். வாயுதேவரைப் பற்றி சொல்லும்போது 'சர்வபூதகளொளகெ பரதரனெனிஸி நியமிஸி நெலெசிஹ' என்கிறார்.

ஆவவனு தேஹதொளகிரலு ஹரி தா நெலெசிஹ
ஆவவனு தொலகெ ஹரி தா தொலகுவ |
இவரே நம் குலகுரு என்கிறார்.

ரகுபதிய சேவெ மாடுவனெந்து வாதசுத ஹனுமந்த நெந்தெனிஸித. ஹனுமந்தனைப் பற்றி கூறும்போது - சுரரொளகெ நரரொளகெ சரியுண்டே ஹனுமந்தகெ. பீமசேனரைப் பற்றி கூறும்போது - வீரனிகெ சுரனரரு சரியே. ஆசார்ய மத்வரைப் பற்றி கூறும்போது - மத்வமுனி நிர்பயதி சகலசாஸ்த்ரவ படிசித.

இவரின் தத்வவாதம் இப்படி இருக்கிறது:

சர்வேஷ ஹரி விஷ்வ எல்ல தா புசியெம்ப
துர்வாதிகள மதவ நெரெ கண்டிஸி

சர்வேஷ ஹரி விஷ்வ சத்யவெந்தருஹித ||

ஸ்ரீமத்வரைப் பற்றி மிகவும் பெருமையுடன் சொன்னவை:
ஜயஜயது துர்வாதிமத திமிர மார்த்தாண்ட
ஜயஜயது வாதிகஜ பஞ்சானனா
ஜயஜயது சார்வாக கர்வபர்வத குலிஷ
ஜயஜய ஜகன்னாத மத்வநாத ||

வாயுதேவரின் மூன்று அவதாரங்களில் - ஹனும - பிரம்மசாரி; பீம - கிருஹஸ்தர்; மத்வர் - சன்யாசி - என மூன்று ஆசிரமங்களில் 'யோ யோ குணா நாம ஜகத்பிரசித்தா: யம் தேஷு தேஷு ஷ்ம நிதர்ஷயந்தி' என்றார் நாராயண பண்டிதர். வாயுதேவர், பகவந்தனின் சேவகனாகி, அவருக்கு மிகவும் முக்கியமான வரானார். ஸ்ரீபாதராஜரின் மத்வநாமாவை அனைத்து வயதினரும் தினமும் படித்து ஹரிவாயுகளின் கிருபைக்கு பாத்திரமாகின்றனர்.

**மாக சுத்த த்வாதசி**

**ஈஷ ஜீவ பேதம்**

ஆகமங்களில் நிர்ணயிக்கப்பட்ட ஈச ஜீவரின் பேதங்களை ஸ்ரீஜகன்னாததாசர் தமது தத்வசுவ்வாலியில் மிகவும் அழகாக தொகுத்துக் கொடுத்திருக்கிறார். அதில் சிலவற்றை மட்டும் பார்ப்போம்.

தந்தெ தாயியு ப்ராத்ரு பந்து சக குரு புத்ர
எந்தெந்து நீனே கதி கோத்ர | கதி கோத்ர இஹ பரதி
இந்திராராத்ய சலஹெம்ம ||

த்வமேவ சர்வம் மம தேவ தேவ.

இந்திராபதி நீனு மந்தபாக்யனு நானு
வந்த்யனோ நீனு சுரரிந்த | சுரரிந்த நரரிந்த
நிந்த்யனோ நானு ஜகதொளு ||

ஏசேசு ஜன்மதலி தாச நா நினகய்ய
ஈச நீனெம்போ நுடி சித்த | நுடி சித்தவாகிரலு
தாசேன மாடலுசிதல்ல ||

பதித நானாதரு பதிதபாவன நீனு
ரதினாதஜனக நகபாணி |நகபாணி நீனிரலு
இதர சிந்த்யாகோ எனகின்னு ||

பிம்ப நீனெனகெ ப்ரதிபிம்ப நா நினகெ க்ஷீ
ராம்புதிஷாயி நரசிம்ஹ |நரசிம்ஹ நீனிரலு
ஹம்பலிபுத்யாகெ ஜகதொளு || -- ஸ்ரீஜகன்னாததாசர்

ஆளு நா நின்னாளு நின்னாளு நானு
நீனு தந்தெ நின்ன கந்த நானு
ஷரண்ய நா நின்ன ஷரணாகதனு
ஸ்ரீபதி சிரிகிருஷ்ண நீ என்ன சலஹபஹுதோ || -- ஸ்ரீவியாசராஜர்

சத்ய சங்கல்ப ஜகதத்யந்த பின்ன ச
ர்வோத்தமோத்தமனே சுகபூர்ண |சுகபூர்ண நின்னன்னு
சித்ததிந்த அகலதிரு கண்ட்ய || -- ஸ்ரீஜகன்னாததாசர்

**மாக சுத்த த்ரயோதசி**

## ஹரிதாசர்களின் இஷ்ட தெய்வம் விட்டலா

கர்னாடகத்தின் ஹரிதாசர்கள் ஸ்ரீஹரியின் ரூபங்களான திருப்பதி திம்மப்பா, பண்டரபுரத்தின் விட்டலா மற்றும் உடுப்பி கிருஷ்ணனை வணங்கினார்கள். இவர்களே காஞ்சன பிரம்மா, நாதபிரம்மா மற்றும் அன்ய பிரம்மர் என்று அழைக்கப்படுகின்றனர். அதிலும், ஸ்ரீபுரந்தரதாசரிடமிருந்து துவங்கி, பெரும்பாலான தாசர்கள் 'விட்டலா' என்று முடியும் அங்கிதத்தைப் பெற்றிருக்கின்றனர்.

ஸ்ரீவாதிராஜர் தமது தீர்த்த பிரபந்தத்தில் சொல்வது இப்படி:

ஸ்ரீபாண்டுரங்கலசிதம் பர புண்டரீக
க்ஷேத்ரம் பவித்ர மஹவன் மஹமாஸ்ரீதோऽஸ்மி ||

ஸ்ரீமதாசார்யர், பண்டரிபுரத்திற்குச் சென்ற ஆதாரம் இல்லையென்றாலும், விட்டல மூர்த்தியை பூஜித்து, அதை தமது சிஷ்யரான பேஜாவர், புத்திகெ, ஷிரூரு ஆகிய மடங்களுக்குக் கொடுத்தது இன்றும் பூஜிக்கப்பட்டு வருகிறது. உத்தராதி மடத்தில், ஸ்ரீஅக்ஷோப்ய தீர்த்தர் பூஜித்த ஸ்ரீவிட்டல மூர்த்தி பீடத்தை

அலங்கரிக்கிறது. ஸ்ரீஸ்ரீபாதராஜருக்கு ரங்கவிட்டல பிரதிமை கிடைத்த விதம் நமக்குத் தெரியும். பரம்பரையில் வந்த ஹரிதாசர்கள் விட்டலனை புகழ்ந்து பாடி இயற்றிய பாடல்கள் ஏராளம். அனைத்து தாசர்களும் பண்டரிபுரத்து யாத்திரையையும் செய்திருக்கின்றனர்.

பந்தேனு எலோ ஹரியே பண்டரீபுர தொரெயெ
இந்தென்ன பாலிசோ பின்னப லாலிசோ || -- ஸ்ரீவிஜயதாசர்.

விட்டலய்யா விட்டலய்யா
நீ கருணிசதெ நிராகரிசலு என்ன
சாகுவராரோ தயாபர மூருத்தி || -- ஜகன்னாததாசர்:

நம்பிதே யன்ன ஹ்ருதய மண்டபதொளு
பரிஷோபிசுதிரு பாண்டுரங்க ||

ஸ்ரீபுரந்தரதாசர் சில முறை பண்டரிபுரத்துக்குச் சென்று, விட்டலனை தரிசனம் செய்து, அங்கேயே பல கிருதிகளை இயற்றியதாக அவரது வரலாற்றிலிருந்து தெரிய வருகிறது. ஞானதேவன் என்னும் தாசர் இந்த விட்டலனை 'கானடே ஹோ விட்டலயா கர்னாடகு' என்று பாடுகிறார்.

இந்த பண்டரிபுரம் ஒரு சுத்தமான வைஷ்ணவ க்ஷேத்திரம். இந்த பிராந்தியத்தின் ஆயிரக்கணக்கான பக்தர்கள் விட்டலனை வணங்கி, பல பாடல்களை இயற்றியிருக்கின்றனர். ஸ்ரீவிஜயதாசர் சொல்வது:

கன்ன பண்டரிராய விஜயவிட்டலரேய |
ரன்ன ப்ரசன்ன சம்பன்ன மதிய கொடு ||

இவரின் சிஷ்யர் 'கண்டே பண்டரிராயன தன்னனு கொண்டாடுவர ப்ரியனே' என்று கொண்டாடுகிறார். இப்படியாக விஷ்ணு பக்தர்களான ஹரிதாசர்களுக்கு, பண்டரிபுரத்தின் விட்டலன் மிகவும் பிரியமான ரூபம் ஆனான்.

**மாக சுத்த சதுர்தசி**

**அக சிந்தனை**

ஏனு மாடுவ கர்ம நீனே மாடிபெ எம்ப
ஞானவே எனகெ ஜிதவாகி |ஜிதவாகி இரலி ம
த்தேனு நானொல்லெ நின்னாணெ || -- ஸ்ரீஜகன்னாததாசர்

'நேற்று இன்று நாளை என எக்காலத்திலும், மூச்சு விடுவதில் துவங்கி, அனைத்து செயல்களும் உன்னாலேயே நடக்கிறது. அதாவது நீனே செய்து செய்விக்கிறாய். இந்த அறிவு எந்த சந்தேகமும் இல்லாமல் எனக்கு வரட்டும். இதுவே உண்மை. ஹே தேவா, இது உன் மேல் ஆணை'. இத்தகைய சிந்தனை அனைவருக்கும் எப்போதும் இருக்கவேண்டும். ஸ்ரீஹரியின் அருளைப் பெற இதுவே முக்கிய சாதனை.

தீன மந்தார சிரிவிஜய விட்டலரேய |
நீனே மாள்பவனெம்ப பக்தர கை பிட || -- ஸ்ரீவிஜயதாசர்

இப்படி அனைத்தையும் செய்து, செய்விப்பவன் அந்த ஸ்ரீஹரியே என்ற அறிவுடன், அவனாலேயே கொடுக்கப்பட்டதை, அவனுக்கே அர்ப்பிக்கும் சிந்தனையும் நம்மில் எப்போதும் இருக்கவேண்டும். அதற்கே ஸ்ரீவிஜயதாசர்:

ஹரியே நின்னாதீன மன சித்தாதிகளு
ஹரியே நின்னாதீன சகல சேதனவு
ஹரியே நின்னாதீன சகல சேஷ்டேகளு ||

இதைப் பற்றியே மேலும்:

குணிஸிதரெ குணிவெ நகிசிதரெ நகுவெ
மணிஸிதரெ மணிவெ அளிசிதரெ அளுவெ
உணிசிதரெ உணுவெ உடிசிதரெ உடுவெ
மனுவேஷனெ சிரிவிஜயவிட்டல நீனே
தணிஸிதரெ தணிவெ நெனெவித்தரெ நெனெவெ ||

ஸ்ரீஹரி சர்வதந்த்ர ஸ்வதந்த்ரன் என்னும் சிந்தனை ஜீவர்களுக்கு எப்போதும் இருக்கவேண்டும். மற்ற அனைவரும் எப்போதும் அ-ஸ்வதந்த்ரர் ‘நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா’ என்னும் சிந்தனை ஒவ்வொரு கணமும் இருக்கவேண்டும். ஸ்ரீஹரி, அனந்தகுணங்களினால் பரிபூர்ணனாகி, தோஷங்கள் அற்றவனாக இருக்கிறான். நான் அவனின் தாசானு தாசன் என்னும் சிந்தனை எப்போதும் இருந்தால் - கர்வம், தற்பெருமை ஆகியவற்றை பெறமாட்டார்கள். அனைத்தையும்விட முக்கியமாக ஒவ்வொரு செயலையும் செய்து முடிக்கும்போது அதை ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்கும் சிந்தனை வரவேண்டும்.

ஸ்ரீத ஹனும பீம மத்வாந்தர்கத |
ராம கிருஷ்ண வேதவியாஸார்ப்பிதவெந்து ||
-- ஸ்ரீவெங்கடவிட்டலர்.

**மாக பௌர்ணமி**

**ஸ்ரீமதானந்த தீர்த்தர்**

ஸ்ரீவாதிராஜர்:
ஆசார்ய: பவனோஸ்மாகம் ஆசார்யாணிச பாரதி |

ஈதனெ காணிரோ மத்வமுனி ஈதனெ காணிரோ
சகலாகமகளெம்ப ஷரதிய தாடலு
யுகுதியிந்த மதிஸி

அகளங்க ஸ்ரீஹரியெம்ப ரத்னவ கண்டு
முகுடதல்லிட்டு லோகதி மெரெதாத |

குருமத்வராயரே ஆத்மரக்ஷகரெந்து
அனலவனு நா பிடியலா ||

சிரிஹயவதனனே அமிதகுண பூர்ணனென்
தஷரீரவனு நுடிசலா ||

ஸ்ரீபுரந்தரதாசர்:
மத்வமுனியே நம்ம குரு மத்வமுனியே

மத்வமுனியே நம்மனெல்ல உத்தரிசுவ காணிரோ
கட்ட கடெயலி மௌனி திட்டனாகி புரந்தர
விட்டல வேதவியாசர நிஷெயிந்த சேவிசுவந்த ||

ஜகன்னாததாசர்:
பஞ்சவிம்சதி தத்வதரதம
பஞ்சிகெகளனு பேள்த பாவி வி
ரிஞ்சியனிபானந்த தீர்த்தர நெனெவெனனுதினவு ||

விஜயதாசர்:
மத்வராயர கருணா படெயதவ தரெயொளகெ
இத்தரேனு இல்லதித்தரேனு |
மத்வமதவே மதவு சகல ஸ்ருதி சம்மதவு
மத்வராயர த்யான அம்ருதபானா
மத்வராயர லீலே நவரதுனத மாலே
மத்வேஷன ஸ்மரணெ குலகோடி உத்தாரா |
மத்வராயர கதெ கேளலு துரித ஹத
மத்வராயர பக்தி மாடே முகுதி ||

ஸ்ரீபாதராஜர்:
அர்பகதனவ நேகி பதரியலி மத்வமுனி
நிர்பயதி சகல சாஸ்திரவ படிஸி
ஊர்வியொளு ஆம்னாயத தத்வாமார்கவனு
சர்வசுஜனரிகெ ஆருஹித மொததி ||

ஜயஜயது துர்வாதி மததிமிர மார்த்தாண்ட
ஜயஜயது வாதிகஜ பஞ்சானன
ஜயஜயது சார்வாககர்வபர்வத குலிஷ
ஜயஜய ஜகன்னாத மத்வ நாத ||

கோபாலதாசர்:
ஆதரிஸோ ஆதரிஸோ ஆகம ப்ரதிபாத்ய
மோததீர்த்த பூர்ண போதாசார்ய ||
முனிகுலோத்தம சிரோரதுனவு காஞ்சவர்ண
கனவிக்ஞான பரிபூர்ண ஷுபகுணா
அனிமிஷர குருவெ அனிமித்தபந்து தயாசிந்து

சனகாதிவந்திதனெ சர்வக்ஞராயா ||

ஸ்ரீவியாசராஜர்:
ஆரு நினகிதிரதிக தாருணியொளகெ
சார சாஸ்திரவனொரெத சர்வக்ஞ முனிராயா |
ஏனெம்பெ நிம்ம கருணவு தேவவர்ய, ஸ்ரீம
தானந்த தீர்த்தார்ய ஹரிகார்யதுர்ய |||

ஜயவாயு ஹனுமந்த ஹய பீம பலவந்த
ஜயபூர்ண மதிவந்த சலஹோ சந்தா ||

கனகதாசர்:
குருமுக்யபிராணன மானவரெல்ல பஜிஸிரோ |
னந்ததீர்த்தர முததொளகெ பந்தவரெல்ல
எந்திகாதரு பரமானந்த பொந்துவரு ||

கலியுகதலி த்ரீயாஸ்ரமவனே தரிஸி
கலுஷத மாயிகளனு சோலிஸி
கிலவாத மத்வமதவனெ நெலிஸி காகி
நெலெயாதிகேசவ பரதெய்வ நெந்தெனிஸுவன ||

மோகனதாசர்:
ஹனும பீம மத்வமுனிராய மாருத
தனுஜாரி பக்த விரக்த கோலே - தனுஜாரி பக்த விரக்த
நின்ன பத வனஜவ முன்ன பலகொம்பே கோலே ||

ப்ரசன்ன வேங்கடதாசர்:
வந்திசிதர காவெ வரவனீவே அஹிப
வீந்த்ர பவ சுரர குரு மத்வமுனிராய ||

ப்ராணேசதாசர்:
இப்பத்தொந்து குபாஷ்ய தப்பானே சோலிசித
சர்வஷயனன ஒலிசீத கோலே - சர்வஷயனன ஒலிசீத குருகள
தப்பதெ நெனெவெனனுதின கோலே ||

மாக பகுள ப்ரதமை

## இதுவே ஆபரணம்

பற்பல பிறவிகளுக்குப் பிறகு வந்த இந்த மனிதப் பிறவியை எப்படி அர்த்தமுள்ளதாக்கிக் கொள்ளவேண்டும், எத்தகைய சத்-கர்மங்களை செய்யவேண்டும், தன் இந்திரியங்களை எப்படி பலனுள்ளதாக மாற்றிக் கொள்ளவேண்டும் என்னும் விவரங்கள் இங்கு உள்ளன. இவை எப்படி இருந்தால் அது நமக்கு ஆபரணம் என்று ஸ்ரீபாதராஜர் ஒரு பட்டியலைக் கொடுக்கிறார். - 'பூஷணக்கெ பூஷண இது பூஷண' என்றார்.

நாலிகெகெ பூஷண நாராயண நாம
காலிகெ பூஷண ஹரி யாத்ரெயு ।
ஆலயக்கெ பூஷண துலசி வ்ருந்தாவன வி
ஷால கர்ணக்கெ பூஷண விஷ்ணு கதெயு ॥

தானவே பூஷண ஹஸ்தகளிகெ
மானவே பூஷண மானவரிகெ ।
ஞானவே பூஷண முனியோகிவரரிகெ
மானினிகெ பூஷண பதிபக்தியு ॥

ரங்கனனு நோடுவுதே கங்களிகெ பூஷண
மங்களாங்ககெ மணிவ ஷிர பூஷண ।
ஸ்ருங்கார துலசிமணி கொரளிகெ பூஷண
ரங்கவிட்டல நிம்ம நாம அதிபூஷண ॥

ஹரிதாச சாகித்யம் முழுவதும் இத்தகைய உதாரணங்களை தாசர்கள் கொடுத்து வருவதை பார்க்கிறோம். 'இவைகளின் சிறப்பினை அறிந்து அவற்றை சரியாக பின்பற்றுவது, இப்படியாக இருந்து வாழ வேண்டும், வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொள்ளவும்' என்று தாசர் அறிவுறுத்துவது மிகவும் முக்கியமான விஷயம். நம் அவயவங்களுக்கு ஆபரணங்களைக் கொடுக்கும் பொருள் எது என்று ஸ்ரீபாதராஜர் விளக்குகிறார். இறைவனுக்குப் பிடித்த, நம் சத்கதிக்கு வழியான ஆபரணங்கள் இவை என்று ராஜர் சொல்கிறார்.

இந்திரியங்கள் ஸ்ரீஹரியைக் குறித்து நகர்ந்தால், அகத்தூய்மை ஏற்படும். இந்த தூய்மையே சக்கதியைக் கொடுக்கும். இதுவே நம் தவறுகளின் பரிகாரங்கள் என்று தெரிவிக்கிறார். அனைத்திற்கும் மேலான ஆபரணம் என்றால் அது ரங்கவிட்டலனின் நற்பெயரை சிந்திப்பதே. 'நாலிகெகெ பூஷண நாராயண நாம'.

## மாக பகுள த்விதியை
## பதி-அந்தர்கத பகவத் ஆராதனை

ஒரு குடும்பம் சுகமாக வாழவேண்டுமெனில், அந்தக் குடும்பத்தில் இருக்கும் கணவன், மனைவி, மக்கள் என அனைவரும் ஒருமித்த கருத்துடன் இருக்கவேண்டும். ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து வாழவேண்டும். மரியாதை, பண்புகள் தேவை. இவை இல்லையெனில், அது ஒரு துஷ்டர்களின் சங்கமமே ஆகும். தமது ஒரு சுளாதியில் ஸ்ரீவிஜயதாசர் சொல்வது:

மக்கள ஒலுமெயலி கண்டன பாததல்லி
பகுதி மாடதவளு அவளே பலு ஹொலதி ||

என்று, மனைவி என்பவள் ஸ்ரீஹரியை கணவன் மூலமாகவே காணவேண்டும். இதுவே சாஸ்திரங்கள் சொல்வது. அனைத்து ஜீவர்களுக்கும் சக்கதியைக் கொடுப்பவனான ஸ்ரீஹரி, பெண்களுக்கு அவரவர்களின் கணவன் மூலமாக வந்தால் மட்டுமே சக்கதியைக் கொடுக்கிறான். அதற்கே தாசர் இவ்விஷயங்களை விளக்குகிறார்.

பதிய கதி எந்து சதி தானு நுடியபேகு
பதிய தருஷன ஸ்ரீபதிய தருஷனவு
பரிய சல்லாபவெ ஷ்ருதிய வசனவு
பதியங்க சங்கவெ உன்னதிகெ கதி
பதிய பாத ஜலவெ தீர்த்தவெனலி பேகு
பதிய உச்சஷ்டவே அம்ருதபானவென்னி
பதிய மாதிகெ நித்ய ப்ரதியாகி நுடியதெ
ஹிதவாகி நுடியுத ஹருஷபொந்திஸ பேகு
பதியந்தர்கத விஜயவிட்டலரேயன
சதத நெனெது சுகியாகுவுது

வைராக்ய பாக்யவெம்போ சௌபாக்ய ஒல்யாடி
வீரநாத விஜயவிட்டலன நெனெயிரி || -- ஸ்ரீவிஜயதாசர்

பதிசேவை ஒன்றே மனைவியின் கடமை என்று சொன்னபிறகு, தவறான வழியில் செல்லும் கணவனை சரியான பாதைக்குக் கொண்டு வருவதும் மனைவியின் கடமையே ஆகும். 'க்ருஹிணி க்ருஹமுச்சதே' நல்ல நடத்தை கொண்ட மனைவியே வீட்டிற்கு அலங்காரம் என்கிறார். த்ரௌபதி தன் கணவருக்கும் போதித்து, அவர்களை நல்வழிக்குக் கொண்டு வந்த உதாரணங்கள் இதிகாசங்களில் உள்ளன. அனைவரையும் நட்புடன் அரவணைத்து, குடும்பத்தை நடத்திச் செல்வது மனைவியின் மிகவும் முக்கியமான கடமை ஆகும்.

**மாக பகுள த்ருதியை**

**லக்ஷ்மி சோபானே**

யுக்திமல்லிகா போன்ற பல சிறந்த கிரந்தங்களை இயற்றிய ஸ்ரீவாதிராஜரின், மந்திர துல்யமான கன்னட கிருதி - லக்ஷ்மி சோபானே. இது ஜகத்மாதாவான லட்சுமிதேவியை புகழ்கின்றது. கூடவே ஸ்ரீயின் தலைவனான மகாவிஷ்ணுவின் சர்வோத்தமத் வத்தை புகழும் கிருதி. அனைவரும் பாடுவதற்கு ஏற்ற கிருதி இது.

சோபானவென்னிரே சுரரொளு சுபகனிகெ
சோபானவென்னி சுகுணனிகெ |
சோபானவென்னிரே த்ரிவிக்ரம ராயகெ
சோபானவென்னி சுரப்ரியகெ ||

பாகவத எட்டாம் ஸ்கந்தத்தில் வரும், பாற்கடல் கடையும் சந்தர்ப்பம். அப்போது அதிலிருந்து வந்த லட்சுமிதேவி கையில் வனமாலை பிடித்து, ஸ்ரீகிருஷ்ணனே (நாராயணன்) சர்வோத்தமன் என்று சொல்லி, மற்றவர்கள் அவருக்குக் கீழ் என்று சொல்லி, அவருக்கே மாலை அணிவித்து மனைவி ஆனார். லட்சுமி சுயம்வரமே இந்த கதையின் கரு. இந்த இருவரின் சிந்தனையே பக்தர்களின் பாக்கியம். த்ருவ தாளம், பந்துவராளி ராகம், 112 நுடிகள் கொண்ட இந்த லக்ஷ்மி சோபானே பாடுவதற்கும், கேட்பதற்கும் இனிமையானது. நாட்டுப்புற பண்ணில்

பாடக்கூடியதாக இருக்கிறது.

சோபானே என்னும் சொல் மறுபடி மறுபடி வருகிறது. ‘ஸ்ரீகிருஷ்ண தயதி எல்லர சலஹலி’ என்று இதைப் படிக்கும் பலனை ராஜர் சொல்கிறார். சச்சிதானந்த ரூபனான ஸ்ரீஹரிக்கு ‘லகுமி ஹரிகெ வதுவாதளு’. இதற்கு முன் மகாலக்ஷ்மி ‘குந்தெள்ளஷ்டில்லத முகுந்தனெ தனகெந்து இந்திரெ பதிய நெனெதளு’ என்றார். அதாவது மற்ற தேவதைகள் அனைவரும் ஏதோ ஒரு தோஷம் உள்ளவர்கள் என்று நிரூபித்து, தோஷங்களே அற்ற நாராயணனை அடைந்தாள். இறுதியில் ‘ஹஸெகே பா’ என்று முடிக்கிறார் ராஜர்.

சேஷஷயனனே பா தோஷதூரனே பா பாசுரகாய ஹரியே பா ।
பாசுரகாய ஹரியே பா ஸ்ரீகிருஷ்ண விலாசதிந்தொம்மெ ஹஸெகெ பா ॥

ஸ்ரீமகாலட்சுமி இறுதியில் சொன்னதாவது:
மாலெய ஸ்ரீநாரி தன்ன கரதல்லி பினகந்தரத
த்ரிவிக்ரமராயன கொரளின மேலிட்டு நமிஸிதளு ॥

லட்சுமி நாராயணரின் திருமண விழாக்கோலம். தேவதைகளில் சிறந்தவனான நாராயணனை மணமுடித்தாள். இத்தகைய ஸ்ரீகிருஷ்ணன் -- ’ஜயவித்த க்ஷீராம்புதியலி ஸ்ரீகிருஷ்ணதயதி நம்மெல்லர சலஹலி’ - என்று வேண்டினாள். ஸ்ரீவாதிராஜ யதிகளின் இந்த லட்சுமிசோபானே பாடல்களை அனைத்து சஜ்ஜனர்களும் தினந்தோறும் படித்து, திருமணம் ஆகிய சந்தர்ப்பங்களில் படித்து ஸ்ரீஹரியின் கிருபைக்கு பாத்திரராவோம்.

**மாக பகுள சதுர்த்தி**

## ஸ்த்ரீ தர்மம்

அனாதி காலத்திலிருந்து நம் பாரதத்தில் பெண்களுக்கு மிகச் சிறப்பான இடத்தைக் கொடுத்து வந்திருக்கின்றனர். அனைத்து நிலைகளிலும் அவர்களைக் கொண்டாடுவது அனைவரின் கடமையும் ஆகும். கணவன், குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது, பாகவத தர்மத்தைப் பேணுவது ஆகியவை அவர்களின் கடமை என்று சொல்லப்படுகிறது. பாகவதத்தில்:

பா பதிம் ஹரிபாவேன பஜே ச்சேரிவ தத்வரா |
ஹர்யாத்மனா ஹரேர்லோகே பத்யா ஸ்ரீரிவ மோததே || (7-11-29)

கணவனில் ஸ்ரீஹரி இருக்கிறான் என்ற சிந்தனை வரவேண்டும். தினந்தோறும் ஜெபம், அதிதிகளை உபசரித்தல், சதாசாரங்களை பின்பற்றுவது என்று இருக்கவேண்டும். ஹரிதாசர்கள் தமது பற்பல கிருதிகளில் ஸ்த்ரீதர்மத்தை விளக்கமாகவும், சுருக்கமாகவும் பாடியிருக்கின்றனர்.

புத்திமாது ஹேளிதரே கேளபேகம்மா மகளே
மன சுத்தளாகி கண்டனொடனே பாளபேகம்மா ||
ஹத்துமந்தி ஒப்புவஹாகெ நடெயபேகம்மா |
நெண்டரொடனே த்ரேஷ பேடம்மா,
கருவ கோப மத்ஸரவன்னு மாடபேடம்மா
குருபுரந்தரவிட்டலன்ன ஸ்மரணெ மரெயபேடம்மா ||

இந்த குணங்கள் இல்லாதவர்களை ஹொலதி என்கிறார். பெண் என்பவள் - தன் தியாகம், அன்பு, சகிப்புத்தன்மை ஆகியவற்றால் அழைக்கப்படுபவள். பிறந்த, புகுந்த என்று இரு குலத்திற்கும் பெருமை சேர்ப்பவள்.

நாஸ்தி பார்யா சமோ பந்துர்னாஸ்தி பார்யா சமாகதி: |
நாஸ்தி பார்யா சமோ லோகே சஹாலோ தர்ம சங்க்ரஹே ||

இப்படி மனைவிக்கு சமமான உறவு உலகில் வேறு யாரும் இல்லை. வீட்டின் புனிதத் தன்மை மற்றும் சமூகத்தின் நலனைக் காப்பாற்றுவது ஸ்த்ரீ தர்மம். சம்சாரம் என்னும் சாகரத்தை தாண்டுவதற்கு ஸ்த்ரீ என்னும் படகு அவசியம். அவள் மற்றவர்களுக்கும் வழிகாட்டியாக இருக்கவேண்டும். அதாவது, மனஸா, வாசா, காயா (மனதால், வாக்கினால், உடலால்) அவள் தூய்மையாக இருக்கவேண்டும்.

க்ருஹகர்மவ ப்யாசரதலெ பரமோத்சஹதலி
மாடுத மூர்ஜகத மஹிதன சேவெயிந்தெனுதலி
மோததி அஹரஹர் மனதி சமர்ப்பிஸுதிப்புதே || -- பலவிது பாளுதக்கே

ஸ்த்ரி என்பவள், பகவந்தனில், பகவத் பக்தர்களில் பக்தி வைத்து, ஹரிதாச சாகித்யத்தை வாழ்க்கையின் ஒரு அங்கமாக மாற்றிக் கொள்ளவேண்டும். குடும்பத்தின், சமூகத்தின் நலனுக்காக, முன்னேற்றத்துக்காக அவள் செய்யும் தர்மமே - ஸ்த்ரீ தர்மம்.

**மாக பகுள பஞ்சமி**

**இது பாக்கியம்**

ஸ்ரீபுரந்தரதாசரின் வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் நமக்கு உற்சாகத்தைக் கொடுப்பவை. ஏனெனில், அவர் குருகளின் ஒருமித்த பாராட்டிற்கு பாத்திரரானவர். பாக்யசாலியான இவர், சஜ்ஜனர்களுக்கு சௌபாக்கியத்தைக் கொடுப்பதற்கு அவதரித்து வந்தவர்.

இது பாக்ய இது பாக்ய இது பாக்யவய்யா ||

கீர்த்தனையின் முதல் பத்தியில் - 'இது' மற்றும் 'பாக்ய' - என்னும் சொற்கள் மூன்று முறை வந்துள்ளன. இப்படி வேறெங்கும் பார்க்க முடியாது.கர்மபூமியான பாரதத்தில் பிறந்தது - இது பாக்ய. இந்தப் பிறவி எடுத்தது, இந்த உடல் கிடைத்தது, வைஷ்ணவத்வம் கிடைத்தது, சித்தாந்தத்தைப் பின்பற்றும் பாக்கியம் கிடைத்தது, இந்த சம்சாரம் / பரம்பரை கிடைத்தது, இந்த யதிகளின் / ஹரிதாசர்களின் பரம்பரை கிடைத்தது என இத்தகைய சிறப்புகள் ஒன்றா இரண்டா - இவை அனைத்தும் நம் பாக்கியம்தானே? அதற்கே தாசர், இது பாக்ய என்றார். நம் குரு, ஹரிதாசர்கள், சஜ்ஜனர்களின் நட்பு - இவை அனைத்தும் கிடைத்தது நம் பாக்கியமே ஆகும்.

இந்தப் பிறவியிலும், முந்தைய பிறவிகளிலும் இந்த பாக்கியத்தைப் பெறுவதற்கு நாம் எப்படி இருக்கவேண்டும் என்ற பட்டியலை கொடுக்கிறார் தாசர். இங்கு தாசர் கூறும் ஒவ்வொன்றையும் மிகவும் ஆழ்ந்து கவனித்து, எவ்வளவு சாத்தியமோ அவற்றை நம் வாழ்க்கையில் பின்பற்றவேண்டும்.

இதுவே மகாபாக்கியம்.

கல்லாகி இரபேகு கடிணபவ தொரெயொளகெ
பில்லாகி இரபேகு பல்லவரொளு ।
மெல்லனெ மாதவன மனவ மெச்சிஸபேகு
பெல்லவாகிரபேகு பந்து ஜனரொளகெ ॥1॥

புத்தியலி தனுமனுவ தித்திகொளலி பேகு
முத்தாகி இரபேகு முனியோகிகளிகெ ।
மத்வமதாப்தியொளு மீனாகி இரபேகு
ஷுத்தனாகிரபேகு கரண த்ரயகளலி ॥2॥

விஷய போகத த்ருணகெ உரியாகிரலு பேகு
நிசி ஹகலு ஹரிய நெனெய பேகு ।
வசுதீஷ புரந்தரவிட்டலன
ஹசனாத தாசரனு சேவிசலு பேகு ॥3॥

சித்தாந்தத்தின் தத்வங்களைப் பின்பற்றி வாழ்க்கை நடத்தி, புனிதன் ஆகவேண்டும் என்று தம் கிருதியில் அழகாக எடுத்துரைக்கிறார். இவற்றை பின்பற்றுவதற்கு அவரது அருளை வேண்டுவோம்.

**மாக பகுள சஷ்டி**

**தைத்யர்களையும் நினைப்போம்**

இது என்ன? பகவந்தனின் / பகவத் பக்தர்களின் எதிரிகளை நினைப்பது என்றால் அது தவறுதானே? இத்தகைய கேள்வி வராமல் இருக்காது. இதற்கு விடையாக ஸ்ரீஜகன்னாததாசர் இந்தப் பாடலைப் பாடுகிறார்.

கலிமுக்ய தைத்யரனு ஸ்மரிஸு பிடதெ
கலுஷவர்ஜித பாகவதர மரெயதலெ ॥ப॥

சாஸ்திரங்களில் தேவதா தாரதம்யத்தைப் போல, தைத்யர்களின் தாரதம்ய ஞானமும் இருக்கவேண்டும் என்கிறார். பர்வகாலங் களில், அந்தந்த தேவதைகளை எப்படி நினைக்கிறோமோ, அதே போல, செய்யக்கூடாத செயல்களை செய்தபோது, அந்தந்த சமயங்களில், தைத்யர்களின் சிந்தனையும் இருக்கவேண்டும்.

மலமூத்ரகள விசர்ஜனெய கைவாக எஞ்
சல கைய்ய பாயதொளெது உகுளுவாக
ஹுளிபீஜ கவடி பகடிகளாடுவாக ம
க்களனாடிசுதலி விஸ்மரணெ இருவாக ||

சந்திகாலதி சதியொடனெ பவடிசிதாக
நிந்த்யகர்மகளனு ஆசரிசுவாக
தந்தெதாய்கள திவச மரது பிட்டாக
கர்மதி பிக்ஷகெ பரலு இல்லவெம்பாக ||

ப்ராய தனமததிந்த ஹேயவிஷயகளு
உபாதேய வெந்தரிது சேவிசுவாகலி |
தாயிதந்தெகள துக்குணகளெணிசுவாக
சாயாத்மகேஹாதிகளு என்னதெம்பாக ||

மதிவந்தரொடனெ மத்ஸர புட்டராகனர்பித
பதார்தகள பக்ஷிசுவாகலே |
ம்ருதவத்ஸகோவுகள பாலனும்பாக
ஶ்ரீபதி ஜகன்னாதவிட்டலன ஸ்ம்ருதி பிட்டாக ||

தாசர், இங்கு எந்தெந்த செயல்கள் செய்யக் கூடாதவை என்றும், அவற்றை தவிர்க்கவேண்டும் என்றும் ஒரு பட்டியலைக் கொடுக்கிறார். இவை அனைத்தும் தைத்யர்கள் செய்யும் செயல் களாம். இத்தகைய சமயங்களில் தைத்யர்களின் நினைவு வந்தால், அந்த பாவங்கள் அவர்களைப் போய் சேரும். பிறகு இத்தகைய பாவங்கள் நம்மை சேராதிருக்குமாறு, ஶ்ரீஹரி நற்புத்தியைக் கொடுக்கிறான். இதில் எந்த சந்தேகமும் இல்லை. காரணம் இத்தகைய தவறான செயல்கள் நடக்கும்போது, அதில் தைத்யர்களின் பங்கு இருக்கவே செய்கிறது. இவர்களால் புத்தி, மனது ஆகியவை களங்கமடையாமல் இருக்க, ஶ்ரீகிருஷ்ணனையே பிரார்த்தனை செய்யவேண்டும். இத்தகைய சிந்தனை தேவை.

தேவதைத்யர தாரதம்யவ
நீவிததி திளிதெல்லரொளு ல
க்ஷ்மீவரனே சர்வோத்தமனு எந்தரிது நித்யதலி |
சேவிசுவ பக்தரிகொலிது சுக

வீவ சர்வத்ரதலி சுகமய
ஸ்ரீவிரிஞ்ச்யாதி வினுத ஜகன்னாதவிட்டலனு || (29-16)

**மாக பகுள சப்தமி**

## தைத்யரின் லக்ஷணம்

ஞானபல சுக பூர்ணவியாப்தகெ
ஹீனகுணவெம்புவனு ஈஸ்வர
நானே எம்புவ சச்சிதானந்தாத்ம குத்பத்தி ||
ஸ்ரீனிதம்பினிகீஷகெ வியோ
கானுசிந்தனெ ச்சேத பேத வி
ஹீனதேஹகெ சாஸ்த்ரகள பய பேளுவவ தைத்ய || (30-2)

தேவதைகளுக்கு இருப்பதைப் போல தைத்யர்களிலும் தாரதம்யம் இருக்கிறது. அதாவது, ஜீவர்களின் லட்சணங்கள் தெரிந்தபோது இந்த தாரதம்ய ஞானம் புரிகிறது. சாஸ்திரங்களிலும் தாரதம்யம் சொல்லப்பட்டிருக்கிறது. தைத்யர்களின் விஷயத்தில், அவர்களது சுபாவம் புரிகிறது - ஹரித்வேஷம், ஹரிபக்தர்களின் த்வேஷம் இதுவே அவர்களது சுபாவம். அவர்களுக்கேற்ற பலனைக் கொடுத்து நரக - தமஸ்ஸிற்கு அனுப்புகிறார் ஸ்ரீஹரி.

தைத்யர்கள் ஸ்ரீஹரியை எப்படி சிந்திக்கிறார்கள் என்ற ஒரு பட்டியலை தாசர் கொடுக்கிறார். சர்வகுண சம்பன்னனான ஸ்ரீஹரி, கெட்ட குணங்களை உடையவன் என்றும், நானே ஈசன் என்றும், சச்சிதானந்த ரூபம் கொண்டவனை, பிறப்பு இறப்பு சுழற்சி உடையவன் என்றும் சொல்வர். எப்போதும் பிரிந்திராத லட்சுமி நாராயணரை அப்படி நினைக்கமாட்டார்கள். தைத்யர்களின் லட்சணங்களை ஸ்ரீகிருஷ்ணன் சொல்லும்போது :ஈஸ்வரோஹம் அஹம் போகி சித்தேஹம் பலவான் சுகீ | என்று சொல்லி, எனக்கு சமம் என்று யாரும் இல்லை என்று திரிபவர் தைத்யர் என்றார். தாமஸ ஸ்வபாவிகளைப் பற்றி ஸ்ரீபுரந்தரதாசர் சொல்வது:

பரர கேடு பயஸி குருஹிரியரன்னு நிந்திசுத்த
பரம சௌக்யவெந்து பரஸ்த்ரீயரன்னு பயசுத்த
பரமனிஷ்டெ மௌனியந்தெ தரெய மேலே டம்பதோரி
ஹரிவ நீரின தெரதி குளிதரேனு பகத்யானதி ||

ஸ்ரீஜகன்னாததாசர், தமது ஹரிகதாம்ருதசாரத்தில், தைத்ய தாரதம்ய சந்தியில் தைத்யர்களின் லட்சணங்களை விவரமாக சொல்லியிருக்கிறார்.

**மாக பகுள அஷ்டமி**

**அபராதி நானய்யா**

காம்போதி ராகம். ஜம்பெ தாளம்.

எந்தஹதோ நின்ன சந்தருசன
கந்துவின ஜனக உடுபி கிருஷ்ணராய ||ப||

பரர ஓதனதிந்தே | பரர த்ரவ்யவே தந்தெ
பர சதியரிகெ நொந்தெ | குருஹிரியர நிந்தெ
ஹிரிதாகாடிதெ முந்தெ | பருதிப்ப பாபதிந்தெ
பரிதெ போயிது வந்தெ | பரியாகி ஈ பொந்தெ
அருஹி தோரிதெ பந்தெ | கருணிஸு ஜகத தந்தெ ||1||

சுஜனர குணவ ஹளிதெ | நிஜகர்மகள ஹளிதெ
குஜனர சங்கதலி பெளிதெ | பஜனெகெட்டு சுளிதெ
ப்ரஜரன்னு பொகளிதெ | வ்ருஜபுண்யகோஷ ஹளிதெ
ருஜுமார்கவ தொரெதுளிதெ | ரஜனி சரமதிகளிதெ
விஜயவார்த்தெகெ முளிதெ | த்ரிஜகபதி கேளிதெ ||2||

ஹரிவாசர பிச்செ | துருளரிகெ தனகொட்டெ
ஹரிபக்தர தொரெது கெட்டெ | ஹரிஸ்ரவண பச்சிட்டெ
பரம விரதவ மெட்டி | ஹருஷதல்லிகெ மனமுட்டி
துரரஸகெ சுகபிட்டெ | விரகுதியனு பிட்டெ
துரிதக்கெ குருதிட்டெ | பரகெகாணினோ பட்டெ ||3||

ஞான வெம்போதே இல்ல | ஏனு பேளலி சொல்ல
நீனெம்போதில்லவல்ல | ஹானி வ்ருத்திகளெல்ல
நானும்பெ எல்ல சல்லா | தானாதெ சததகுல்ல
ரானுடிகெ சோது செக்க | ரானடதி சிரினல்ல
நா நடெதெ நீ பல்லா | தே நோடப்ரதிமல்ல ||4||

அபராதி நானய்யா | அபவாத தவனய்ய
க்ருபணதிந் தென்னகாயா | உபஜய வாயிது ப்ரீய
ஸ்வபனதி புண்ய சஹாயா | அபமாடிலில்ல ஜீயா
க்ருபெயலி பிடிகையா | விஜயவிட்டலரேயா
குபுதவாதுபாயா | தபசிகள மனோ ஜய ||5|| -- ஸ்ரீவிஜயதாசர்

**மாக பகுள நவமி**

**நீ என்னை காப்பாற்று**

நின்னனே நம்பிதனோ நீ நன்ன சலஹய்யா -- இது புரந்தர தாசரின் வாக்கு. வேறு யாரும் இல்லாமல் உன்னை மட்டுமே சரணடைகிறேன் என்றால் – 'அன்யதா ஷரணம் நாஸ்தி த்வமேவ சரணம் மம' - என்பதுபோல அனைத்து ஜீவராசிகளையும் காப்பாற்றுபவன் அவன் ஒருவனே. அதற்கே இப்படி பாடினார் தாசர். ஸ்ரீஹரி 'நின்னல்லி ஏனிதே, நின்னிந்த ப்ரயோஜனவேனு' (உன்னிடத்தில் என்ன இருக்கிறது? உன்னால் எனக்கு என்ன பிரயோஜனம்?) என்னும் கேள்விக்கு தாசரின் பதில் – 'என்ன குணதோஷகள எணிச பேடய்யா' - என்றார். காரணம், ஸ்ரீஹரி பக்தவத்ஸலன், பக்தாபராத சஹிஷ்ணு ஆகையால். தாசர், மேலும்:'நம்பி கெட்டவரில்லவோ ரங்கய்யன, நம்பதெ கெட்டரே கெடலி' என்றார். நம்பி வந்தவன் ஆகையால் என்னை காப்பாற்று என்கிறார்.

இது மட்டும் சொன்னால் போதாது. நம்மிடம் உள்ள தோஷங்களை அவனிடம் சமர்பித்து, அவனிடம் உள்ள நற்குணங்களைப் பாடி, அவன் நிர்தோஷி என்று பாடி, அவனையே வேண்ட வேண்டும். 'தோஷிகளொளகெ ஹிரிய நா, நிர்தோஷிகளரஸெ விட்டலா' என்று சரணடைய வேண்டும். அனைத்து சஜ்ஜனர்களின் விஷயமாக இந்த வேண்டுகோளை ஸ்ரீஹரியிடம் வைக்கிறார் தாசர். நம் வாழ்க்கை, நடவடிக்கைகள் எப்படி இருக்கிறது என்றால்:

பால்யதலி கெலவு தின பரிதெ ஹோயிது ஹொத்து
மேலே யௌவனமுததி முந்தரியதித்தெ |
ஜால சம்சாரதலி சிலுகி பளலிதெனய்ய
பாலிஸோ பரமாத்ம பக்திய கொட்டு ||

பிரகலாதராஜர், தைத்ய மாணவர்களுக்கு உபதேசித்தது இதையே. பால்ய, கௌமார, யௌவன ஆகிய நிலைகளில் எவ்வித சாதனைகளையும் செய்ய இயலாது. சம்சார சாகரத்தில் விழுந்ததால் அதிலிருந்து மீளமுடியாது. அதற்கே அவனை சரணடைந்து, என்னை காப்பாற்று என்று வேண்டினார்.

ஆசெயெம்புது அஜன லோகவனு முட்டுதிதெ |
வாசுதேவன ஸ்மரணெயொம்மெயாதரூ இல்ல
ஈ தெரதி காலவனு இந்திரேஷனெ களெதெ

இப்படி வேண்டிய தாசர், இறுதியில் ஸ்ரீஹரியிடம் சொல்வது இது:

மாதெ தன்னய ஷிருவ மன்னிசுவ தெரனந்தெ |
தாத புரந்தரவிட்டல தயமாடி சலஹோ ||

இதுவே அனைவரின் வேண்டுதல் ஆகவேண்டும். அப்போதே ஸ்ரீஹரியின் தரிசனம் கிடைப்பது சாத்தியம். அவரவர்களின் ஆசிரமத்திற்கு தக்கவாறு, தர்ம ஆசரணையை செய்து, ஸ்ரீஹரியின் மகிமைகளை எவ்வளவு முடியுமோ அறிந்து, 'நீனென்ன சலஹய்யா' என்று எந்நேரமும் வேண்டினால், இந்த பிறவியில் மட்டுமல்ல அனைத்து பிறவிகளிலும் அவனின் அருள் நமக்குக் கிடைத்து, சத்கதியைப் பெறமுடியும்.

**மாக பகுள தசமி**

**எப்போதும் அவனையே நினை**

ப்ராத: காலதல்லி நாராயண என்னி
ஸ்ரீதுலசியல்லி விஷ்ணுவின ஸ்மரணெ மாடி
மூத்ர விசர்ஜனெ சமய காலதல்லி
நீ திளியோ கேஷவ நாமக ஹரிய ஸ்மரணெ மாடு மரெயதிரு
ம்ருத்திகெய சௌசக்கெ ஸ்ரீத்ரிவிக்ரமனோ
தண்டதாவனதி ஹரிமுக மொதலாத ப்ரக்ஷாலக்கெ மாதவ
கோகண்ட வரிசுவ காலக்கெ கோவர்த்தன
வாத நோடிய நம்ம விஜயவிட்டல மூர்த்திய
மாத்ரகால பிடதெ நெனெஸி தன்யனாகோ || -- ஸ்ரீவிஜயதாசர்

சாதகனான மனிதன், தினந்தோறும் சதாசாரங்களை பின்பற்ற வேண்டும். காலையில் எழுந்தபோது ஒவ்வொரு நொடியிலும் பகவந்தனின் நாம ஸ்மரணையை செய்யவேண்டும் என்று தாசர் நமக்கு தொகுத்துக் கொடுத்ததை சொல்லவேண்டும். இதற்கு மூலம், பஞ்சராத்ர ஆகமத்தில் உள்ளது.

ப்ராதர் நாராயணம் ஸ்ம்ருத்வா துலசீ க்ருஷ்ணவந்தனம்
சௌசகாலே கேஷவம் து ம்ருதா சௌசே த்ரிவிக்ரமம் |
தந்ததாவன காலே து ஹரிர்த்யேயோ புஜாஷ்பக:
முக ப்ரக்ஷாலனே காலே மாதவம் மனஸா ஸ்மரேத்
கவாம் கண்டோயனே காலே ஸ்மரேத் கோவர்த்தனம் ஹரிம் ||

இதைப் பின்பற்றி, ஸ்ரீபுரந்தரதாசர் தமது ஒரு பாடலில், நாம் காலை முதல் இரவு வரை ஒவ்வொரு செயல்களை செய்யும்போதும், நினைக்கவேண்டிய ஸ்ரீஹரியின் பெயர்களை இப்படி சொல்கிறார்.

முஞ்சானே எத்து கோவிந்த நின்ன, நம்ம
நஞ்சிப துரிதவு தூரவென்னி |
...

கருணாகரனென்னி கபட நாடகனென்னி
கரிராஜனனு காய்த கிருஷ்ணனென்னி ||

ஸ்ரீபுரந்தரதாசர் - ஹரிய நெனெயிரோ நம்ம ஹரிய நெனெயிரோ - என்றார்.

நின்ன ஸ்ம்ருதியே விதி விஸ்ம்ருதி நிஷேத
புண்யவெந்தரு இதெ பாபவெந்தரு இதெ
இனில்ல இன்னில்ல இதக்கிந்த சாதன || -- ஸ்ரீகோபாலதாசர்

**மாக பகுள ஏகாதசி**

**தத்வசுவ்வாலி**

சாதாரண மக்களுக்கும் எட்டுமாறு ஸ்ரீஜகன்னாததாசர், த்ரிபதி நுடியில் தத்வசுவ்வாலியை இயற்றினார். வாழைப்பழத்தை உரித்து நமக்குக் கொடுத்ததைப் போன்ற எளிமையான நடை. பற்பல விஷயங்களைத் தொகுத்து, எளிதாக விளங்குமாறு இருக்கும்

தத்வங்களின் கருவூலம் இது.

ஸ்ரீமதாசார்யர் நிரூபித்த தத்வங்களை, சாரமாக தொகுத்து நமக்குக் கொடுத்ததே இந்த தத்வசுவ்வாலி. தத்வசுவ்வாலி என்னும் ரத்ன மணிகளை சரமாகக் கட்டி மாலையாக செய்து, ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்தார் ஸ்ரீஜகன்னாததாசர். இங்கு சிலவற்றை மட்டும் பார்ப்போம். நேரம் இருப்பவர்கள் இந்த தொகுப்பை முழுமையாக படிக்கவேண்டும் என்பது விருப்பம்.

பகவந்தன் ஒரு ஆச்சரியம்
அணுவிகணுதரனாகி கனகெ கனதரனாகி
அணுமஹத்துகள தெஷெயிந்த |தெஷெயிந்த நீ வில
க்ஷண னெனிஸிகொம்பே ஷ்ருதியொளு ||

'அணோரணீயான் மஹதோ மஹீயான்' என்று வேதம் ஸ்ரீஹரியை வர்ணிக்கிறது. இதையே தாசர் மொழிபெயர்த்துள்ளார்.

கர்மக்ஞ கர்மஷ கர்மப்ரவர்த்தகனே
கர்மபலதாத கர்மஸ்த |கர்மஸ்த என்னது
ஷ்கர்ம களெது நீ சலஹய்யா ||

ஜீவர்களினால் செயல்களை செய்வித்து, கர்மபலன்களைக் கொடுத்து காப்பாற்றுபவன் ஸ்ரீஹரி.

பிம்ப பிரதிபிம்ப பாவம்
பிம்ப நீனெனகெ ப்ரதிபிம்ப நா நினகெ க்ஷீ
ராம்புதி ஷாயி நரசிம்ஹ |நரசிம்ஹ நீனிரலு
ஹம்புலிபுத்யாகே ஜகதொளு ||

பிம்பனின் அதீனத்தில் இருப்பது பிரதிபிம்பம். பிம்பனின் பார்வையிலேயே எப்போதும் இருக்கும் பிரதிபிம்பர், அவனின் கிருபைக்கு பாத்திரரானபிறகு, இன்னும் வேறு என்ன கவலை என்று கேட்கிறார் தாசர்.

நின்னதீனனு நானு நின்ன தாசர தாச
என்னதேனய்ய அபராத |அபராதகள நோடி
பன்ன படிசோது உசிதவே ||

ஆகையால் நான் எப்போதும் உன் சேவகன். மேலும் துன்பப்படுத்தாமல், இந்த தாசானுதாசனை காப்பாற்ற வேண்டும். பகவந்தனிடம் தன்னை ஒப்புவிப்பதைப் போன்ற வாக்குகள். ஐதரேய உபநிஷத்களில் வரும் விஷயங்களை தொகுத்து கொடுத்திருப்பதை இங்கு பார்க்கிறோம்.

வாயுதேவரிடம் சொல்லவேண்டியது:
பவமானராய நீ த்ரிவித ஜீவரொளித்து
விவித வியாபார நீ மாடி |நீ மாடி மாடிஸி
அவரவர கதிய கொடுதிப்ப ||

பவமான குருவே நின்னவர சேவக நானு
ஸ்ரவணமனனாதி பகுதிய |பகுதி நின்னல்லி மா
தவனல்லி கொட்டு சலஹய்யா ||

ஸ்ரீஹரியின் கருணையைப் பற்றி ஸ்ரீஜகன்னாததாசர் கொடுக்கும் உவமை இது.

நீரு த்ருணமீயே கோ க்ஷீரவனு கரெவந்தெ
சூரிகளு பாள்ப அபராத |அபராத ஸ்வீகரிஸி
சாரூப்யவீவெ சர்வக்ஞ ||

ஜீவ-ஈச பேதங்களை மிகவும் எளிமையான சொற்களினால் விளக்குகிறார்.

நித்ய பத்தனு நானு நித்யமுக்தனு நீனு
ப்ருத்யனு நானு ப்ரபு நீனு |ப்ரபு நீனு மூர்லோக
வியாப்தனு நீனு அணு நானு ||

வாழ்க்கையில் நாம் செய்யும் அனைத்து நடவடிக்கைகளையும், செயல்களையும், அவை ஸ்ரீஹரியின் பூஜை என்று நினைத்து செய்யவேண்டும் என்கிறார்.

நடெவுதே ஹரியாத்ரே நுடிவுதே ஹரிநாம
குடிவ நீருகளே அபிஷேக |அபிஷேக தினதினதி
ஒடலிகும்பன்ன நைவேத்ய ||

ஸ்ரீஜகன்னாததாசர், தமது தத்வசுவ்வாலி பாடல்களில் பற்பல விஷயங்களை அடக்கிவைத்து, அமிர்தத்தைப் போல நம்மை குடிக்க வைக்கிறார். கணபதி ஸ்தோத்திரத்தில் துவங்கி, நவக்கிரகங்கள், சிவன், வாயு, லக்ஷ்மிதேவி, ஸ்ரீகிருஷ்ணன், ஸ்ரீனிவாசனைப் பற்றி, தசாவதாரங்கள், மாயாவாத கண்டனம், என்று பற்பல தத்வ விஷயங்களை சுவ்வாலி நுடியில் அருளியிருக்கிறார். அனைத்தையும் அங்கு பார்த்து, படித்து, அறிந்து கொள்ளவேண்டும். சிறந்த விஷயங்களைப் பற்றி தாசர் சொல்வதாவது.

மததொளகெ மத்வமத விரததொளகெ ஹரிதினவு
கதெயொளகெ பாகவத கதெயென்னி |கதெயென்னி மூர்லோக
கதிஷய ஸ்ரீகிருஷ்ண ப்ரதியென்னி ||

**மாக பகுள த்வாதசி**

## கருட சேஷர்

தேவதா தாரதம்யத்தில் கருட சேஷர், ஐந்தாவது வகுப்பில் வருபவர்கள். இருவரும் எப்போதும் ஸ்ரீஹரிக்கு சேவை செய்பவர்கள். கருடன் ஸ்ரீஹரியின் வாகனம் என்றால், சேஷன் ஸ்ரீஹரி எப்போதும் படுத்திருக்கும் சயனம். இருவரும் வேத மற்றும் மனோ அபிமானிகளாக இருக்கின்றனர். இவர்களுக்கு அடுத்து இருக்கும் வகுப்பினரை கட்டுப்படுத்துபவர்கள். கஷ்யப ப்ரஜாபதிகளின் மக்கள் இவர்கள். இருவரும் சம வகுப்பினர். இவர்களை ஸ்ரீஜகன்னாததாசர் தமது ஹரிகதாம்ருதசாரத்தில் வணங்கியது இப்படி:

ஜகதுதரன சுரோத்தமன நிஜ
பெகலொளாந்து கராப்ஜதொளு பத
யுகதரிஸி நகபங்க்தியொளு ரமணீயதரவாத |
நகதரன பிரதிபிம்ப காணுத
மிகெஹருஷதிம் பொகளி ஹிக்குவ
ககுலாதிப கொடலி மங்கள சகலசுஜனரிகெ || (32-8)

ஸ்ரீஹரியின் அருகிலேயே இருந்து அவனை எப்போதும் காணும் பாக்கியத்தைப் பெற்றவர் கருடன். இவருக்கு அவதாரம் இல்லை. சௌபர்ணியின் கணவன். பக்ஷிராஜன். பாற்கடலைக்

கடைவதற்காக மந்தர மலையை கொண்டு வந்தவர். அமிர்த கலசத்தையும் கொண்டு வந்தவர் இவரே. சேஷர் ஜீவர்களின் அபிமானி தேவதை. வாருணியின் கணவன். அனந்தன் என்று அழைக்கப்படும் இவர், தனது அனந்தமான தேகத்தினால், பிரம்மாண்டத்தை தூக்கியவர். ஜகன்னாததாசர் இவரை வணங்குவது இப்படி:

யோகிகள ஹ்ருதயக்கெ நிலுக நிக
மாகமைகவினுதன பரமனு
ராகதலி த்விசஹஸ்ர ஜிஹ்வெகளிந்த வர்ணிசுவ |
பூ ககன பாதாளவ்யாப்தன
யோக நித்ராஸ்பதனெனிப குரு
நாகராஜன பதக்கெ நமிசுவெ மனதொளனவரத || (32-9)

வேத ஆகமங்களினால் வணங்கப்படுபவர், எப்போதும் ஸ்ரீஹரியையே வணங்குபவர், நாகராஜனை வணங்குபவர். சேஷர் த்ரேதாயுகத்தில் லட்சுமணனாக, த்வாபர யுகத்தில் பலராமனாக அவதரித்து, ஸ்ரீஹரியின் கூடவே இருந்த தன்யர். இவர் பூமியின் கீழ்ப்பாகத்திற்கு அதிபதி. இந்த சேஷதேவரினாலேயே, திருப்பதியின் வெங்கடாசலத்திற்கு சேஷாசலம் என்று பெயர் வந்தது. முக்தி மார்க்கத்தை சொல்லும்போது, பிரம்மசூத்ரகாரர், சேஷ மார்க்கம், கருட மார்க்கம் என இரு வழிகள் இருப்பதாக சொல்கிறார். இறுதியில் கருட சேஷர், சரஸ்வதியிலும், சரஸ்வதி பிரம்மனிலும், பிரம்மன் அழிவில்லாத லட்சுமிதேவியிடமும் - தத்தம் மனைவியருடன் முக்தியை அடைகிறார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**மாக பகுள த்ரயோதசி**

**சிவசங்கரன்**

தந்த்ரசாரத்தில் ஸ்ரீமதாசார்யர், 'நம: சிவாய' என்று ஜெபிக்கும் மந்திரத்தை சொல்லியிருக்கிறார். கருட சேஷருக்கு சமம் என்று, ஐந்தாம் வகுப்பில் வரும் ருத்ரதேவர், சதுர்முக பிரம்மனின் மானஸ-புத்ரர் ஆவார். 'வைஷ்ணவானாம் யதா ஷம்பு:' என்பது போல, இவர் மகாவிஷ்ணுவின் அத்யந்த பக்தர். அனைத்து

ஜீவர்களின் மனோ நியாமகனான சிவனை, முழு ஹரிதாச பரம்பரையே பாடி புகழ்ந்து கொண்டாடியிருக்கின்றனர். ஆகமங்களில் சொல்லியிருப்பதைப் போல, அனைத்து மாத்வரும் சிவ ஆராதனையை செய்வது மிகவும் அற்புதமான விஷயம். சிவ என்றால் மங்களம். ஷம் என்றால் சுகம். இவைகளைக் கொடுக்கும் இவரை எப்படி வணங்க வேண்டும்?

நமோ பார்வதி பதி நத ஜனபர நமோ விரூபாக்ஷ |
ரமாரமணனலி அமல பகுதி கொடு நமோ பாலாக்ஷா || -- ஸ்ரீவியாஸராஜர்

மேலும் இன்னொரு கிருதியில்:
சோமசேகரனொப்ப தானே பல்ல ஸ்ரீ
ராமனாமாம்ருத சவியனெல்ல ||

ஸ்ரீவாதிராஜரும் சிவனின் மேல் பாடியிருக்கிறார்.
தவளகங்கேய கங்காதர மஹாலிங்க மா
தவன தோருசய்ய குருகுலோத்துங்க ||

'கண்டே கருணாநிதிய' என்னும் பாடலில் ஸ்ரீபுரந்தரதாசர் சிவனின் சிறப்பு அம்சங்களை புகழ்ந்திருக்கிறார்.

தாசனாகபேகு சதாசிவன தாசனாகபேகு |
மனத கல்மஷ களெது மஹாதேவன மஹிமெய திளிது
தனுவு அஸ்திரவெனுத திளிது சங்கரன ஹ்ருதயதி காணுத
ஆரு மூரு ஹரினாரு தத்வத மேரி தோருவ காகிநெலெ ஆதிகேசவனடி || -- ஸ்ரீகனகதாசர்

த்ரயனேத்ர சித்ரகாத்ர நய நமிஷர மித்ர ஜய
ஜயாமர ஸ்தோத்ர தயாமாடோ புண்யபாத்ரா ஹா
பயனிவாரண சிரிவிஜயவிட்டலன பகு
திய கொடு அதிஷயதி பினாகிஷா || -- ஸ்ரீவிஜயதாசர்

பாகிரதி தரனே பயவ பரிஹரிசய்யா
லேசாகி நீ சலஹோ சந்தத சர்வ தேவ |

நந்திவாஹன நமிபெ களவ்ருந்த மோஹன

சோமசேகர கிரிஜாசுத்ராமலேகரா |
நாகபூஷண விமல, சத்ராக பாஷண || -- ஶ்ரீஜகன்னாததாசர்

ஷிவம் தத்யாத் சதாஷிவ: ||

**மாக பகுள சதுர்தசி**

**மகா சிவராத்திரி**

ஹர ஷம்போ மஹாதேவ விஸ்வேஷ அமரவல்லப |
ஷிவ ஷங்கர சர்வாத்மன் நீலகண்ட நமோஸ்துதே ||

ஹரிதாச சாகித்யத்தில் ஹரிதாசர்கள் த்வைத சித்தாந்தத்தின் தாரதம்யத்திற்கேற்ப தேவதைகளை புகழ்ந்து பாடியிருக்கிறார்கள் என்பதை பார்க்கிறோம். பாற்கடலைக் கடையும்போது வந்த ஆலாஹல விஷத்தை வாயுதேவர் ஸ்வீகரித்து, சிறிதளவு சிவனுக்கு கொடுத்ததால், ஶ்ரீகண்டன் என்று பெயர் வந்தது. இவர் ஐந்தாம் வகுப்பில் வரும் தேவதை. மனோ நியாமகராகவும், அழித்தலுக்கு காரணமானவரும் ஆவார் இவர். சிவ என்றால் மங்களம். அனைத்து ஹரிதாசர்களும் மங்களத்திற்காக கிருதிகளை இயற்றியிருப்பதை அறிகிறோம்.

ஶ்ரீபாதராஜர்:
மங்களாங்கனே மாரஜனக நா மாடித தப்ப
ஹிங்கதே க்ஷமிஸோ யதுகுலதிலக வக்ஷதலொப்புவ நி
ந்னங்கனெ அரியளு நகமஹிமாங்க ஹீகெனுதலி தவக
ரங்கவிட்டலன பதங்கள பிடிது சா
ஷ்டாங்கவெரகி கைலாஸக்கெ நடெத ||

ஶ்ரீவியாஸராஜர்:
தவள கங்கெய கங்காதர மகாலிங்க மா
தவன தோரிசய்யா குருகுலோத்துங்க
மாரன கெத்த மனோஹர மூர்த்தி
சார சஜ்ஜனரிகெ சுர சக்ரவர்த்தி ||

ஶ்ரீபுரந்தரதாசர் பற்பல கிருதிகளில் சிவனை பாடியிருக்கிறார்.

சந்த்ர சூட சிவசங்கர பார்வதி ரமணனெ நினகே நமோ நமோ |

கொரளலி பஸ்ம ருத்ராக்ஷிய தரிஸித பரமவைஷ்ணவனு நீனே ।
கருடகமன ஸ்ரீபுரந்தரவிட்டலன ப்ராணப்ரியனு நீனே ॥

ஸ்ரீகனகதாசர்:
குருலிங்க பங்கமவ அரியபேகாதரெ சிவசிவசிவ என்னிரோ முந்தெ ।
பரமாத்மன நீவு திளியபேகாதரெ சிவசிவசிவ என்னிரோ ॥

ஸ்ரீவிஜயதாசரும் ருத்ரரைக் குறித்து பல பாடல்களைப் பாடியுள்ளார்.
கைலாசவாசா கௌரீச ஈச ।
தைலதாரேயந்தே மனசு கொடொ ஹரியல்லி சம்போ ॥

இன்று ருத்ரதேவரின் ஸ்தோத்திரங்களைப் படித்து, வைஷ்ணவர்களால் பூஜிக்கப்படும் சிவலிங்க தரிசனத்தைப் பெற்று, அவரின் அருளைப் பெறுவோமாக.

**மாக அமாவாசை**

## வைகுண்ட வைபவம்

‘வைகுண்ட: புருஷ: பிராண:’ என்று மகாவிஷ்ணுவின் ஒரு பெயர் வைகுண்டம். உத்தம ஜீவர்கள் தங்களது சாதனைகளை முடித்து, ஸ்ரீஹரியின் அருளினால் போய்ச் சேரும் இடம் வைகுண்டம். இதையே மோக்ஷம் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. துக்கங்கள் அற்ற, ஆனந்த அனுபவத்தைக் கொடுக்கும் இடம் இதுவாகும். விஷ்ணுவின் அருளால் மட்டுமே கிடைக்கக்கூடிய இடம். அவனிடம் செய்யும், ஞான பூர்வகமான, களங்கமற்ற, சுத்தமான, நிரந்தர பக்தியினால் மட்டுமே கிடைக்கக்கூடியது. விஷ்ணுவின் சான்னித்யத்தால் வைகுண்டம் எப்போதும் பவித்ரமானதாக இருக்கிறது.

முக்தி யோக்யருக்கு மட்டுமே அனுமதி இருக்கும் இந்த இடத்தைப் பற்றி நாராயண பண்டிதர் சொல்வது: ’யம்யம் சுகீகா மயதீர்த்தமத்ர, சங்கல்பமாத்ராத் சகலோபிசஸ்யாத்’.இங்கு நினைத்த மாத்திரத்தில் எதையும் அடையமுடியும். அனைத்து புருஷார்த்தங்களும் முயற்சியின்றி கிடைக்கும். பகவந்தனை

நேரடியாக தினமும் பார்க்கும் வாய்ப்பு. ஸ்ரீவாதிராஜர், தமது வைகுண்ட வர்ணனையில் சொல்வது:

'எந்தெந்து குண்டனவெம்ப நாஷவில்லதெ இந்திரேஷனெ வைகுண்ட
நஷ்சரவல்லத ஈ பதவே புதரிகெ ஷாஷ்வத ஸ்தானவெனிபுது'

மேலதிக விவரங்களை, ஸ்ரீவாதிராஜரின் வைகுண்ட வர்ணனை, கோபாலதாசர் கோலுஹாடு மற்றும் சுமத்வவிஜயத்தின் பதினோறாவது சர்க்கத்தில் படிக்கலாம். அப்ராக்ருதமான வைகுண்ட லோகத்தைப் பற்றி ராஜர் சொல்வது:

ரன்னகெத்திஸித சின்னதொளு கோடி மன்மதனய்யன புரிகெ |
தன்னத்யதலி அயோத்யவெம்ப நகரி சவர்ணகோபுரத லோப்பிஹவு ||

சிரிதேவி தானே முரஹரன பட்டணதொளு பரிபரிய மனெயரூபதலி |
மிரிமிரனெ மிஞ்சுவளு ஹச்ச ப்ரக்ருதியிந்த விரசித கைஹகளொப்பிஹவு ||

பகவான் ஸ்ரீகிருஷ்ணன், தன் வைகுண்டத்தைப் பற்றி தானே சொன்னது:

ந தத்பாஸயதே சூர்யோ ந ஷஷாங்கோ ந பாவக: |
யத்கத்வான நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம || -- பகவத்கீதை 15-6.

ஸ்ரீராஜர் இன்னொரு இடத்தில்:
அனர்க்ய ரதுன மந்திரகளொளு ப்பரிகெகள பண்ணிசலென்ன ளவல்ல

மோக்ஷம் பரம்பதம் திவ்யமத்ருதம் விஷ்ணுமந்திரம் |
அக்ஷரம் பரமம் தாம வைகுண்டம் ஷாஷ்வதம் பதம் ||

முக்தியில் நான்கு விதங்கள் இருக்கின்றன. இவற்றில் தகுதியுள்ள முக்கிய ஜீவர்கள் வாழ்ந்து, சுகத்தை அனுபவித்திருப்பர்.

சாயுஜ்ய சாலோக்ய சாமீப்ய சாரூப்ய

ஈ யந்ததி சதுர்வித முகுதியொளு ||

முக்தர போகக்கே தக்க பலங்கள ஹொத்து ஹொத்தில்லி கொடுடிப்ப |
நித்ய நிர்துக்கசுக ஸ்வரூபராகி சுத்த சுளிவரு லீலெயல்லி ||

'ஜக்ஷன் க்ரீடன் ரமமாண:' என்னும் பாடலிலும் முக்தர்களின் போகங்களைப் பற்றி வர்ணித்திருக்கின்றனர். வாயுஸ்துதியில் முக்தர்களின் சிறப்பினைப் பற்றி 'ஆனந்தான்மந்தமந்தா' என்ற ஸ்லோகத்தில் வர்ணனை இருக்கிறது. மோகனதாசர் தமது கோலுஹாடு பாடலில் வைகுண்டத்தைப் பற்றி:

அப்ப நாராயணனிப்பந்த ஆரமனெ |
அப்ராக்ருதவாத வைகுண்ட கோலே |
அப்ராக்ருத வைகுண்டவெம்போரு ஸ்வப்ரகாஷத
பரமாத்ம கோலே || என்றார்.

தாசர் சொல்லிய சில விஷயங்களை பார்ப்போம். வைகுண்டத்தில்: 'அங்கு அனைவரும் சுகமாக இருப்பர். அங்கு அனைவரும் புகழ்பெற்றவர்கள். மங்களமானவர்கள். அங்கு காமம், கோபம் ஆகியவை இல்லை. அன்பு, நட்பு, காதல் ஆகியவை உள்ளன. பிரச்னை என்பதே யாருக்கும் இல்லை. வஞ்சிப்பவர்கள் இல்லை. விதவைகள் இல்லை. விதுர புருஷர்கள் இல்லை. மந்தி புத்தியுள்ளவர்கள் இல்லை. அங்கு ஐந்து வித தாரதம்யங்கள் உண்டு' -- என்று பலவிதமாக வர்ணிக்கிறார்.

'ஒப்ப பிராஹ்மனு புராண பேள்வ கோலே...' இப்படி ஸ்ருதிகளில், வியாஸ, தாச சாகித்யத்தில் வைகுண்டத்தைப் பற்றி சொல்லப் பட்டிருக்கின்றன. 'ந ச புனராவர்த்ததே' என்று அங்கு சென்றவர்கள் மறுபடி சம்சாரத்திற்கு வருவதில்லை. பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியில் சிக்காத முக்தி.

பகவந்தனின் இருப்பிடமான, அப்ராக்ருதமான, துக்கங்களே இல்லாத, நிரந்தர சுகத்தைத் தரக்கூடிய வைகுண்டத்தையே வேண்டி, தத்தம் வர்ணாசிரமத்திற்கு ஏற்ப சாதனைகளை, விதிப்படி, குருகளின் உபதேசத்தின்படி, ஸ்ரீமதாசார்யரின் வழியின்படி நடந்து,

இத்தகைய இடத்தை அவனின் அருளின்படி அடையவேண்டும் என்பது ஆகமங்கள் சொல்லும் தத்வம்.

இந்த வைகுண்ட லோகத்தைப் பற்றி அறிந்தவர்களுக்கு சர்வ மங்களம் உண்டாகும்.

வைகுண்ட லோகவெம்ப புரத கதெய ப
ராகுவிட்டு கேள்வ ஜனர ஸ்ரீகாந்தகாவ ||

**பால்குண சுத்த ப்ரதமை**

**ஓம்காரம். அனைத்து வேதங்களின் சாரம்.**

அனைத்து வேத ஆகமங்களின் சாரமும் ஓம்காரத்தில் அடங்கியிருக்கின்றன. அதற்கே ஸ்ரீஹரியை ஓம் என்று அழைக்கின்றன. இதில் மொத்தம் ஆறு எழுத்துக்கள் இருக்கின்றன. இதன் விரிவாக்கமே 24 எழுத்துக்களைக் கொண்ட காயத்ரி மந்திரம். இந்த காயத்ரி மந்திரத்தின் விரிவாக்கமே புருஷசூக்த மந்திரம். என்றால் அனைத்து வேதங்களும் இந்த புருஷ சூக்தத்தில் அடக்கம் என்று பொருளாகிறது.

அனைத்து வேதங்களும், ஸ்ரீஹரி சப்தங்களினால் அழைக்கப்படு பவன் என்கிறது. இந்த விஷயத்தை சாரமாக தாசர் வர்ணிக்கிறார்.

ஆரு அக்ஷரவுள்ள வியாஹ்ருதியிந்த ஓம்கார வி
ஸ்தாரவாகுவது கேளி ஈ பரி இப்பத்து நால்கு
அக்ஷரதிந்த தோருதலி காயத்ரி ரசிஸித ஹரியு
மெரெவுதை புருஷசூக்ததி அனந்த வேதராசி
தொரெ எந்து பொகளுவ ஓம்கார ஸ்ரீ
கார மெரெவுது ஐவத்தொந்து அக்ஷரகளு |
ஈ ரீதி ஆசேஷகுணாதார எந்து
நாராயணோSத பூர்ணகுணயுத
பரதி ஞானரூபாஷப்தனு |மெரெவ தேவேஷ ஷரர்தன தரிசிதெ
புரந்தரவிட்டலா ஓம்காரா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

அ, உ, ம, நாத, பிந்து, கல, ஷாந்த, அதிஷாந்த - என்ற இந்த எட்டு விஷயங்கள் ஓம்காரத்தில் அடங்கியிருக்கின்றன. இந்த எட்டிற்கும்,

விஷ்வ, தெய்ஜஸ, ப்ராக்ஞ, துரீய, ஆத்ம, அந்தராத்ம, பரமாத்ம, ஞானாத்ம என்ற எட்டு பகவத் ரூபங்கள் உள்ளன. பூ: புவ: ஸ்வ: என்னும் வியாஹ்ருதிகளே சந்தஸ். பிரம்மனே ரிஷி. தேவதை - ஸ்ரீஹரி.

காயத்ரி மந்திரத்திற்கு விஸ்வாமித்ரரே ரிஷிகள். காயத்ரி சந்தஸ். நாராயணனே தேவதை. ஓம்காரத்தினால் பிறந்த ஸ்ரீஹரியின் ரூபங்கள் வியாஹ்ருதியில் இருக்கின்றன. அதே ரூபங்கள் காயத்ரியின் ஒவ்வொரு எழுத்துகளிலும் இருக்கின்றன. அதே பகவந்தனின் ரூபங்கள் அனைத்து வேதங்களிலும் உள்ளன.

காயத்ரி மந்திரத்தை ஜெபிக்கும்போது மேற்கண்ட சிந்தனைகள் நமக்குத் தேவை. சூரிய மண்டலத்தில் இருக்கும் பகவந்தனின் ரூபம் பிரசாத ரூபம். ஸ்ரீகோபாலதாசர் தமது ஒரு கிருதியில் வேத சாரத்தைப் பற்றி சொல்வது:

அகார உகார மகாரவிதெ | ஓம்காரவாக விஸ்தார
புருஷசூக்த காயத்ரி விஸ்தார அதே
நால்கு வேதகளிந்தி விசார ஹாஹா
அ உ ம கார வாச்ய பிரம்ம சிவ விஷ்ணு
ஏகோ நாராயணானேக பூஜ்யனெந்து ||

## பால்குண சுத்த த்விதியை வேண்டும் பொருட்களின் பட்டியல்

பிறந்து வந்த ஜீவனுக்கு இருக்கவேண்டிய நற்குணங்களை அழகாக தொகுத்து ஸ்ரீவியாசராஜர் ஒரு பட்டியலிட்டுக் கொடுத்திருக்கிறார்.

நரனாத மேலே ஹரிநாம ஜிஹ்வெயொ ளிரபேகு ||ப||

பூததயா பரனாகிர பேகு
பாதகவெல்லா களெயலு பேகு
மாது மாதிகெ ஹரியென பேகு ||1||

ஷாந்தி க்ஷமெ தயெ ஹிடியலு பேகு
ப்ராந்தி க்ரோதவ களெயலு பேகு

சந்தத சன்மார்க்கதலிரபேகு ||2||

காம க்ரோதவ தா பிடபேகு
மமதாஹங்காரவ களெயலு பேகு
சௌம்யர சங்கதொளு இரபேகு ||3||

வேத சாஸ்திரவனோதலு பேகு
போததத்வ திளியலு பேகு
மாதவன ஸ்மரணெ மாடலு பேகு ||4||

தந்தெ கிருஷ்ணன தயவிரபேகு
பந்துத உண்டு சுகபடபேகு
சந்தாகி ஜகதொளு இரபேகு ||5|| -- ஸ்ரீவியாஸராஜர்

ஸ்ரீராஜர் இங்கு கொடுத்திருக்கும் 'வேண்டும்' என்னும் பட்டியல், ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் கண்டிப்பாக தேவையான பட்டியலாகும். இவற்றைப் பின்பற்றுவதால் வாழ்க்கையில் நிம்மதி, குடும்பம், சமூகத்தில் அமைதி கிடைக்கும். எப்போதும் நம் நாக்கில் ஹரி நாமஸ்மரணை இருக்கவேண்டும். இதையே இன்னொரு இடத்தில்:

கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண எந்து மூரு பாரி நெனெயிரோ
சந்துஷ்டனாகி முகுதிகொட்டு மிக்க பார ஹேருவனோ || என்றார்.

**பால்குண சுத்த த்ருதியை**
**ஸ்வகதபேத விவர்ஜித ஈச**

ஸ்ரீஜகன்னாததாசர்:
ஸ்வகதபேத விவர்ஜிதனு ச
ர்வக சதானந்தெய்க தேஹனு
பகெ பகெய நாமதலி கரெசுவ பகுதரனு பொரெவ ||

அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கும் ஸ்ரீஹரி, ஸ்வகதபேத விவர்ஜிதன். ஸ்ரீஹரியின் உறுப்புகளில், குணங்களில், அவதாரங் களில், தேசகால என்று எந்தவொரு காரணத்தாலும் அவனுக்கு வேறுபாடுகள் இல்லை. சாஸ்திரங்களில் சொல்லியிருப்பதையே ஸ்ரீமதாசார்யர் தம் கிரந்தத்தில்:

நிர்தோஷ பூர்ணகுணவிக்ரஹ ஆத்மதந்தோ
நிஸ்சேதனாத்மக ஷரூரகுணைஸ்ச ஹீன: |
அனந்தமாத்ரகரபாத முகோதராதி: சர்வத்ர ச
ஸ்வகதபேத விவர்ஜிதாத்ம ||

அனைத்து வேதங்களாலும் புகழப்படுபவனாக, லட்சுமிதேவியாலும் அறியப்படாதவனாக, ஞானானந்தாதி சத்குணங்களுக்கு அதிபதியான ஸ்ரீஹரி, மனது, வாக்குகளுக்கு புலப்படாத அனந்தன். அவனது தேகமே சச்சிதானந்த ஸ்வரூபம். ஸ்வகத பேத விவர்ஜிதமானதாகும். ஸ்ரீஹரியின் ரூபம் மற்றும் குணங்களில் எந்தவொரு பேதமும் இல்லை. பிரம்மாண்ட புராணத்து வசனம் இதுவே.

விஷ்ணோர் குணானாம் ரூபாணாம் ததங்கானாம் முகாதினாம் |
ததா தர்ஷன காலாத்து க்ஷிப்ரமேவ தமோ ப்ரசேத் ||

விஷ்ணுவின் குணரூபங்களில் பேதங்களை சிந்திப்பவன், தமஸ்ஸிற்குப் போவான் என்கிறது. ஏனெனில், பகவந்தன் ஆபாதமௌலி வரைக்கும், ஞானானந்தாதிகளால் நிரம்பியவன்.

பாதநக பரிபூர்ண, ஞான ஜங்கே பரிபூர்ண
ஊருகடி பரிபூர்ண, நாபி குக்ஷி பரிபூர்ண
உர கண்ட பரிபூர்ண, அம்புஜமுக பரிபூர்ண
ஷிரோ பாஹு பரிபூர்ண, ஷிரோருஹ பரிபூர்ண
சர்வாங்க பரிபூர்ண புரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

'நேஹ நானாஸ்தி கிஞ்சன' என்று ஸ்ரீஹரி ஸ்வகதபேத விவர்ஜிதன் என்று வேதம் கூறுகிறது.

**பால்குண சுத்த சதுர்த்தி**

**சக்ராப்ஜ மண்டலம்**

தினந்தோறுமே ஸ்ரீஹரியை சக்ராப்ஜ மண்டலத்தில் வைத்து பூஜை செய்வது மிகவும் சிறந்த செயலாகும். இது ஸ்ரீமதாசார்யர் தமது தந்த்ரசார சங்க்ரஹத்தில் நிரூபித்த தத்வம். 'பூஜ்யஸ்ச பகவான் நித்யம் சக்ராப்ஜாதிக மண்டலே'. எங்கும் வியாபித்திருக்கும் மகா விஷ்ணுவின் அணுரூபத்தின் விஸ்வருபமே இந்த மண்டலம். பகவந்தனின் அனைத்து ரூபங்களும் மற்றும் அவனின் கீழ் இருக்கும் தேவதைகளின் ரூபங்களின் திவ்யதரிசனம் இங்கு இருக்கிறது. ஆசார்ய மத்வர் தெரிவித்திருக்கும் இவ்விஷயங் களை, ஸ்ரீவிஜயதாசர் தம் கங்கணாகார சுளாதியில் விவரமாக விளக்கியிருக்கிறார்.

கங்கணாகாரவனு பரெதவர மத்யெ
ஓம்கார எரடு எட பலதி ரசிஸி
ஷங்கெயில்லதெ நடுவெ க்ருணியெந்து லிபிஸி...

எட்டு தாளங்களில், மிகவும் விவரமாக சஜ்ஜனர்களின் சாதனைக்கு உதவுமாறு இந்த சுளாதியை இயற்றி ஸ்ரீவிஜயதாசர் அனைவருக்கும் மிகப்பெரிய உதவியை செய்திருக்கிறார். இதில் நடு நாயகமான இருக்கும் 'க்ருணி' என்பதற்கு, கருணாமயியான பகவந்தன் பரம க்ருபாளு என்று பொருள். இந்த மண்டலத்தில் ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தை தெரிவிக்கிறார். இந்த சிந்தனைகளை எப்போதும் நினைத்திருப்பதே, ஹரிபூஜை என்று சொல்கிறோம். நம்முள் இருக்கும் பிம்பமூர்த்தியை காண்பதற்கு, மிகவும் பக்தியுடன் செய்யப்படும் இந்த பூஜை ஒரு சாதனையாகிறது. அதற்கே தாசர்:

சித்த சாதனவிது பிம்ப காம்புதக்கெ |
பத்மாவல்லப ஸ்ரீவிஜயவிட்டல ப்ராப்தி || என்றார்.

'பத்மம் வ்ருத்தத்ரயம் சக்ரம் ராசயோ விதிகாஸ்ததா |
ஷோபோப ஷோபிகாஸ் சைவ சக்ராப்ஜஸ்யது லக்ஷணம் ||'

இப்படி ஆசார்யர் சொன்ன மிகவும் சூக்ஷ்மமான விஷயத்தை, விஜயதாசர் மிகவும் விளக்கமாக, சஜ்ஜனர்கள் தங்கள் சாதனையின் மூலம் மேம்படட்டும் என்ற நல்லெண்ணத்தில் நமக்கு இயற்றி அருளினார்.

ஸ்ரீஹரியின் படம்/குறி என்று இருக்கும் இந்த சக்ராப்ஜ மண்டலம், மொத்த பிரம்மாண்டத்தையே தனக்குள் வைத்திருக்கிறது. இந்த மண்டலத்தை மொத்தம் 7 பாகங்களாகப் பிரித்து, நான்கு பெரிய வட்டங்களாகப் பிரித்து, அதை பூஜிக்கவேண்டும். பெண்கள் தினந்தோறும் போடும் கோலத்தில் இதை சிந்தித்து வரைந்து பூஜிக்கவேண்டும். பூஜை செய்யும் அதிகாரம் இருக்கும் ஆண்கள், இந்த சக்ராப்ஜ மண்டலத்தின் மேல் சாலிக்ராமத்தை வைத்து, தந்த்ரசாரோக்த முறையில் பூஜை செய்யவேண்டும்.

பெண்கள் இந்த சக்ராப்ஜ மண்டலத்தை வரைந்து, மற்றவர்களுக்கும் சொல்லிக் கொடுத்து, பூஜிக்கும் வழிமுறையை வகுத்துக் கொள்ளவேண்டும். மேலதிக விவரங்களை அறிந்தவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளவும்.

**பால்குண சுத்த பஞ்சமி**

**பகவத்ரூப சிந்தனை**

ஸ்ரீஜகன்னாததாசர் தமது தத்வசுவ்வாலியில், ஸ்ரீஹரியின் பல ரூபங்களின் சிந்தனையை அழகாக தொகுத்து, மனப்பாடம் செய்வதற்கு எளிமையான வழியில் இயற்றிக் கொடுத்திருக்கிறார். இதை அனைவரும் மனப்பாடம் செய்து கொண்டால், ஸ்ரீஹரியின் அருள் கண்டிப்பாகக் கிடைக்கும் என்று நம்புகிறேன்.

சதுரவித புருஷார்த்த சதுராத்ம நீனிரலு
இதர புருஷார்த்த நானொல்லெ |நானொல்லெ த்வத்பாத
ரதிபாக்ய நீனெ கருணிஸோ ||

தர்ம அர்த்த காம மோக்ஷ என்னும் புருஷார்த்தங்களுக்கு, அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் ரூபங்கள் நியாமகனாக இருக்கிறார்கள்.

ஜய மத்ஸ்யகூர்ம ஜய ஜய வரஹ நரசிம்ஹ
ஜயது வாமனதேவ ப்ருகுராம ।ப்ருகுராம ரகுராம
ஜய கிருஷ்ண பௌத்த கலிஹர்தா ॥

ஜய விஷ்வ தைஜஸனே ஜய ப்ராக்ஞ துர்யாத்ம
ஜய அந்தரத்ம பரமாத்ம ।பரமாத்ம ஞானாத்ம
ஜயது அனிருத்த ப்ரத்யும்ன ॥

ஜயது சங்கர்ஷணனெ ஜய வாசுதேவனே
ஜய ஜயது ஸ்ரீலக்ஷ்மி நாராயண ।நாராயணானந்த
ஜயது ஸ்ரீகோவிந்த அச்யுத ॥

ஜய பூர்ண ஞானாத்ம ஜய பூர்ண ஐஸ்வர்ய
ஜய ப்ரபாபூர்ண தேஜாத்ம ।தேஜாத்ம நந்தாத்ம
ஜய ஜய ஷக்த்யாத்ம க்ருத்தோல்க ॥

ஜய ஜய மஹோல்க ஜய ஜயது வீரோல்க
ஜய ஜயது த்யுல்க சஹஸ்ரோல்க ।சஹஸ்ரோல்க ஜய ஜய
ஜய ஜகன்னாதவிட்டலார்ய ॥

ஜீவஜடாத்மக உலகத்தில் ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் நிறைந்திருந்து அனைவருக்குள்ளும் வியாபித்திருக்கிறான். ஸ்ரீஹரி அனந்த ஜீவராசிகளில் அனந்த ரூபங்களில் இருந்து அனைத்து செயல்களையும் செய்து செய்விக்கிறான். இறுதியில் அவரவர்களின் தகுதிக்கேற்ப பலன்களைக் கொடுக்கிறான்.

**பால்குண சுத்த சஷ்டி**

**அனைத்தும் விஷ்ணுவினுடையதே**

இது ஸ்ரீமதாசார்யர் நிரூபித்த தத்வம். இதை நிரூபித்து, நிறுவுவதற்கென்றே அவதரித்து வந்த ஜீவோத்தமர். ஆசிரமம் ஏற்றுக்கொண்டபிறகு, முதல் பதரி யாத்திரையின்போது ஆசார்யர், தாம் இயற்றிய கீதா பாஷ்யத்தை ஸ்ரீமன் நாராயணனுக்கு சமர்ப்பிக்கச் சென்றார். அங்கேயே 48 நாட்கள் (ஒரு மண்டலம்) மௌன விரதம் இருந்தார். வேதவியாசர் ஆசார்யரை தமது அருகில் வரச் செய்தார். சிஷ்யர்கள் தூங்கிக் கொண்டிருக்கும்

போதே, கருணாமயியான ஆசார்யர் அவர்களுக்காக ஆறுதல் வசனங்களை எழுதி வைத்து, மேல் பதரிக்குப் புறப்பட்டார்.

அத்யதிக ஷமலக்ன நிஸ்சய
துத்தமத ஈ பதரிஸ்தலதிம்
மத்தே புண்யஸ்தானவில்லவு பாகரதிஸமதா |
நித்ய ப்ரவஹிபதீர்தஸலில ஸ
ரித்து இல்லவு விஷ்ணு சத்ருஷத
உத்தமத தெய்வில்ல நம்ம ஹிதோக்தி சத்ருஷில்ல ||

இது நாராயண பண்டிதரின் சுமத்வ விஜய ஸ்லோகத்தின் மொழிபெயர்ப்பு.

நேத்ருஷம் ஸ்தமலம் ஷமலக்னம் நாஸ்ய
தீர்த்த சலிலஸ்ய சமம் வா: |
நாஸ்மதுக்தி சத்ருஷம் ஹிதரூபம் நாஸ்தி
விஷ்ணு சத்ருஷம் நனு தெய்வம் || (6-47)

பண்டிதர், அனைத்து சஜ்ஜனர்களுக்கு கொடுத்த செய்தி இது. இந்த வாக்கியங்கள் ஆசார்ய மத்வருடையது என்பதை மறக்கக்கூடாது. இவரே தன் கைப்பட எழுதிய பிரதி. நான்கு விஷயங்கள் நான்கு வித புருஷார்த்தங்களைக் கொடுக்க வல்லதாக இருக்கிறது.

அனைத்து பாவங்களையும் போக்கக்கூடிய பதரி க்ஷேத்திரத்திற்கு சமமான இன்னொரு க்ஷேத்திரம் இல்லை. கங்கைக்கு (அலகநந்தா - விஷ்ணுபதி) சமமான புண்ய தீர்த்தம் வேறொன்று இல்லை. சர்வோத்தமனான மகாவிஷ்ணுவிற்கு சமமான இன்னொரு தேவதை என்றும் இல்லை. நம் (மத்வரின்) உபதேசத்தைப் போல ஆறுதல் தரக்கூடிய வசனம் வேறொன்று இல்லை.

மத்வர் கொடுத்த செய்தியை, உபதேசத்தை மிக கவனமாக பார்த்தால், அவற்றில் அனைத்துமே அடங்கியிருக்கிறது. இது சாதனைக்கான வழியே ஆகும். குருவின் மூலம் ஸ்ரீஹரியைக் காண்பதற்கு ஒரு நல்ல வழிகாட்டியாக இருக்கிறது. இதுவே கருணாமயியான ஆனந்ததீர்த்தரின் - நம் வழிகாட்டியின் - தத்வவாதம்.

## பால்குண சுத்த சப்தமி
## நமக்குள் இருக்கும் நாடிகளின் சிறப்பு

பிரம்மாண்ட மற்றும் பிண்டாண்டங்களின் படைப்பு, ஸ்ரீஹரியைப் போலவே அற்புதமானது. இவற்றில் அடங்கியிருக்கும் ஒவ்வொரு விஷயமும் வர்ணிக்க இயலாதவை. இது ஸ்ரீஹரியால் மட்டுமே செய்யக்கூடிய செயல் - மகிமை. இங்கு மனிதனின் உடலில் இருக்கும் எண்ண முடியாத, மிகச்சிறந்த நாடிகளைப் பற்றிய சிந்தனையை செய்வோம்.

நம் தேகத்திற்குள் இருக்கும் நாடிகளைப் பற்றி, ஸ்ரீஜகன்னாததாசர் தமது கிருதியான ஹரிகதாம்ருதசாரத்தில் ஒரு சந்தியையே ஒதுக்கி, அதில் மிகவும் விளக்கமாக விவரித்துள்ளார்.

வாசுதேவனு ப்ராணமுகத
த்வேஷரிந்தலி சேவேகைகொளு
தீஷரீரதொளிப்ப மூவத்தாருசாஹஸ்ர || (12-1)

ஜீவனின் ஸ்தூல சரீரத்தில் வலதுபாகத்தில் பகலுக்கு அபிமானியான தேவதைகள் இருக்கும் 36,000 புருஷ நாடிகள்; இடது பாகத்தில் இரவுக்கு அபிமானியான தேவதைகள் இருக்கும் 36,000 ஸ்த்ரீ நாடிகள் இருக்கின்றன. மொத்தம் 72,000 நாடிகளில் இருக்கும் தத்வாபிமானி தேவதைகள் மற்றும் பிராணதேவரில், ஸ்த்ரீபுருஷ ரூபங்களினால் அவர்களினால் சேவிக்கப்படுகிறார் ஸ்ரீஹரி. இவன் ப்ருஹதி என்னும் பெயரினால் அழைக்கப் படுகிறான். மேலும்:

சத்யசங்கல்பனு சதா எ
ப்பத்தெரடு சாஹஸ்ரதொளு மூ
வத்துனாலகுலக்ஷ தெய்வத்தாரு சாஹஸ்ர || (12-6)

ஸ்ரீஹரி 72,000 நாடிகளில் 34,56,000 ரூபங்களில் இருந்து நம்மை காக்கிறான். மொத்த தேகத்திலும் இருக்கும் நாடிகளில், தீர்த்தங்களின் சன்னிதானம் உள்ளது. அவற்றை சிந்தனை செய்தால், ஸ்ரீஹரி அனைத்து பலன்களையும் கொடுக்கிறான். நாபியிலிருந்து தலை வரை ஓடும் முக்கியமான பிரம்ம நாடி,

சுஷும்னா என்று அழைக்கப்படுகிறது.

இதில் ஸ்ரீமன் நாராயணன் இருக்கிறார். இதில் தைத்யர் பிரவேசிக்க முடியாதவாறு வாயுதேவர் காக்கிறார். இந்த நாடியிலிருந்து புறப்படும் பற்பல கிளைகள், தேகம் முழுவதுமாக பயணிக்கிறது.

ஈ தனுவினொளகிஹவு ஓத
ப்ரோதரூபதி நாடிகளு புரு
ஹூதமுகரல்லிஹரு தம்மிந்ததிகரோடகூடி || (12-16)

சுஷும்னா நாடியானது, நான்கு திசைகளிலும் வியாபித்து இருக்கிறது. வஜ்ரகா, இடா, ப்ரகாஷினி, பிங்களா என்று பெயர் பெற்றுள்ளது. இவற்றில் வரிசையாக - ஓம்பூ: ஓம்புவ: ஓம்ஸ்வ: மற்றும் ஓம்பூர்புவஸ்வ: என்னும் வியாஹ்ருதிகளுக்கு - அனிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண மற்றும் வாசுதேவ ரூபங்கள் நியாமகனாக இருக்கின்றார்கள்.

இந்த மொத்த நாடிகளான 72,000 நாடிகளில் ப்ருஹதி சஹஸ்ர ரூபங்கள் இருக்கின்றன. ஸ்ரீஹரியினால் படைக்கப்பட்ட, நிலைத்திருக்கிற நாடிகளின் விவரங்களை ஸ்ரீஜகன்னாததாசர் நாடி பிரகரண சந்தியில் விவரித்துள்ளார். ஸ்ரீவிஜயதாசரின் சுளாதிகள் மற்றும் பல கிருதிகளின் மூலம் இவற்றைப் பற்றி அறியலாம். இது ஸ்ரீஹரியின் சிறப்பு மற்றும் மகிமை ஆகும்.

**பால்குண சுத்த அஷ்டமி**

**அஷ்டபாவ புஷ்பங்கள்**

சஜ்ஜனர்கள் தினந்தோறும் பிம்பரூபியான ஸ்ரீஹரியை அஷ்டபாவ புஷ்பங்களினால் பக்தியுடன் அர்ச்சித்து, பூஜிக்க வேண்டும் என்று பாகவதம் சொல்கிறது. இதனால் ஸ்ரீஹரி மகிழ்ச்சியடைந்து, அனைத்து நலன்களையும் கொடுக்கிறான். இந்த அஷ்டபாவ புஷ்பங்கள் என்றால்:

அஹிம்ஸா ப்ரதமம் புஷ்பம் புஷ்பம் இந்திரிய நிக்ரஹ:
சர்வபூததயா புஷ்பம் க்ஷமா புஷ்பே விசிஷ்ட்யதே |

ஞானபுஷ்பம் தப: புஷ்பம் த்யான புஷ்பம் து சப்தமம்
சத்யம் சைவாஷ்டமம் புஷ்பம் ஏபிஸ்துஷ்யதி கேஷவ: ॥ -- பாவபிரகாசிகை

ஶ்ரீகோபாலதாசர் தமது ஒரு சுளாதியில், இந்த அஷ்டபாவ புஷ்பங்களை ஶ்ரீஹரிக்கு அர்ப்பிக்க வேண்டும் என்று சொல்கிறார்.

பாவாஷ்ப புஷ்பங்களு தேவகெ அர்ப்பிசுவ
பாவனெயனு கேளி பக்தஜனரு
ஜீவரிந்த ஈ தர்ம எந்திகெ ஆதத்தல்ல
தேவனல்லிவெ இந்தா குணகளுண்டு
பாவாஷ்ட புஷ்ப குணவா தேவனல்லி இஷ்டவெந்து
ஜீவ திளிதரெ உத்தார உண்டு ॥

தர்மாதி புஷ்ப நம்மய்யகெந்து, கம்மனெ அர்ப்பிசு கனபகுதியலி ।
ஹரிகெ இந்த்ரிய நிக்ரஹ ஸ்திர புஷ்பவெந்தெந்து
அரிது அர்ப்பிசுவ ஜீவரிகெ லேபிசுது ।
பூததயா புஷ்ப பூதேஷகல்லதெ ॥

சர்வதா க்ஷமெ புஷ்ப சர்வேஷகல்லதெ,
கர்வதத்வதி புத்தி ஜீவரிகெ சல்ல ।
தம ஞான த்யானவு சமீசீன புஷ்பவு
ரமேஷகல்லதெ ஸ்ரமிசோ ஜீவரிகில்ல ।

சத்யவெம்புவ புஷ்ப சத்வேஷகெ இது,
நித்ய அன்யதனுடிவ ஜீவரிகெ சல்ல ।
பேதவில்லதீபுஷ்ப இப்புது ஹரியல்லி
ஸாதிஸர்சிலு கோபாலவிட்டலா ஒலிவ ॥

அஷ்டபாவ புஷ்பங்கள்: அஹிம்ஸா, இந்திரிய நிக்ரஹ, சர்வபூததயா, க்ஷமெ, ஞான, தபஸ், த்யான, சத்ய.

**பால்குண சுத்த நவமி**

**ஹரிமயம் ஜகத்**

ராகம்: பைரவி. தாளம்: த்ருவ

ஹரிதாச ரொடனாடு, ஹரியங்க்ரி யுக்மனோடு
ஹரியெந்து கொண்டாடு ஹரிநாம ஹாடி பாடு
ஹரி ப்ரசாதவெ பேடு, ஹரி சேவெயன்னு மாடு
ஹரிகெ கரவ நீடு, ஹரிய பிடதெ காடு
ஹரிய பொகளி பாடு, ஹரிகெ மனசு கொடு
ஹரிகொப்பிஸு ஈ பேடு, ஹரித்வேஷிகள பிடு
ஹரித்யானதல்லி கொடு, ஹரிகருணத ஜோடு
ஹரியதந்தெ தோடு, ஹரி நரரிகெ ஓடு
ஹரியல்லி ரதி இடு, ஹரிகெ இல்லவோ ஈடு
ஹரி விஜயவிட்டலன்ன ஹரியெந்தரெ ஈ நாடு
ஹருஷ படுவுது நோடு, ஹரிது போகதெ கேடு ||1||

தாளம்: மட்ட
ஹரிய பகுதி ஹரி பல்லவனெல்ல
ஹரிதா ஹத்தரொளகெ ஹரி ஹரிதாடுவ
ஹரிவந்தனு காணோ ஹரி திக்குவ பவவ
ஹரியொளகிந்தலி ஹரிதெத்து பப்ப, ஹரிகண்டவனென்னு
ஹரிவதன நம்ம விஜயவிட்டல நர
ஹரி நாமவே பரிஹரிசுவுது நரக ||2||

தாளம்: த்ரிவிட
ஹரிய நம்பிரோ ஜனரு வைராக்யபரராகி
ஹரிது போகதெ நித்ய பரர ஒடவிகெ
ஹரி ஹனுமந்த ஒந்தே எந்து திளிது
ஹரி இத்தல்லி பவமான இப்பனெந்து
ஹரிய பஜிஸி பவமானன்னெ தொரெதரெ
ஹரிபுரவாகது ஷதகல்பக்கு
ஹரிஷரணர பளிவிடிது பகுதியல்லி
ஹரிஸ்ரவணவ கேளு ஸ்வணதல்லி
ஹரிதவந்தித நம்ம விஜயவிட்டலரேய
ஹரி எந்து நுடிதரெ ஹரிது பப்பனு காணோ ||3||

தாளம் : அட்ட
ஹரிய பகுதி கண்டவரிகெ தொரகுவதெ ?
ஹரிதேரி பர்வதாக்ரதிந்த பூமிகெ
ஹரிய பித்தரே இல்ல, சுத்துவ சுளியொளு

ஹரிது முணுகி எத்து பந்தரெ இல்ல
ஹரியரொளகெ நித்யஹகலிருளு தலெ
ஹரி மாடிகொண்டு நபகெபாரிதரில்ல
ஹரிபகுதி கண்டவரிகெ சூரே?
ஹரிபகுதி சம்பாதனெ கண்டே?
ஹரிணாங்ககுலபால விஜயவிட்டலனங்க்ரி
ஹரிய பல்லவனிகெ சுலபசாத்யவென்னி ||4||

தாளம் : ஆதி
ஹரியெ பரமபுருஷ, ஹரி பராத்பர தேவ
ஹரி அப்ராக்ருதகாய, ஹரி ப்ரளயவிரஹித
ஹரி முக்தாஸ்ரய, ஹரி சர்வாந்தர்யாமி
ஹரி ஜீவ ஜடகெ பேத, ஹரி அணுமஹாரூப
ஹரி கர்த்தா ஜகத்காரண ஹரி ரமாதயப்ரீய
ஹரி வைகுண்ட ரமண, விஜயவிட்டலரேய
ஹரி தோருவனு பகுதி கைகொண்ட மனுஜரிகெ ||5||

ஜதெ:
பகுதிகெ கேடில்ல அனந்தகாலக்கெ
பகுதிபடியிரோ விஜயவிட்டலனல்லி || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீஹரியின் நாமாவளியே இந்த சுளாதி. ஸ்ரீவிஜயதாசர், ஸ்ரீஹரியின் நற்குணங்களைப் பாடி, ஸ்ரீஹரியில் பக்தியை வைத்து, சாதனை வழியில் எப்படி நடக்கவேண்டும் என்பதை விளக்கியிருக் கிறார். மிகவும் அற்புதமான சக்தியுள்ள ஸ்ரீஹரியே சர்வோத்தமன். அனைத்து ஜீவர்களும் அவனின் சேவகர்கள் - தாசர்கள். அவன் இல்லாமல் யாரும், எப்போதும், எந்த செயல்களையும் செய்யமுடியாது. இந்த உலகத்தில் அனைத்து இடங்களிலும் நிலைத்திருந்து, அனைத்தையும் செய்விப்பவனாக இருக்கிறான் ஸ்ரீஹரி. அவனே செய்பவன், செய்விப்பவன். படைத்தல் முதலான அஷ்ட - கர்த்ருத்வத்திற்கு அதிபதி. புருஷோத்தமன், பிரம்மாண்டத் திலும், புருஷ ரூபத்தினால் நம் தேகத்திலும் நிறைந்திக்கிறான், அணுவிலும் சரி மிகப் பெரிய பொருட்களிலும் சரி நிறைந்திருக்கிறான். அவன் இல்லாத இடம் என்பதே இல்லை. இது ஹரியினுடையது இல்லை என்பதே இல்லை.

'பக்த்யைக வஷ்ய: ப்ரபு:' என்பதுபோல, ஸ்ரீஹரியிடம் ஞானபூர்வகமாக செய்யும் பக்திக்கு மட்டும் அவன் காட்சியளிப்பான். அருள்வான். அதற்கே தாசர் 'பகுதி படியிரோ விஜயவிட்டலனல்லி' என்றார். தாசர், இந்த சுளாதியில் சொல்லியிருக்கும் ஒவ்வொரு சொல்லும், வாக்கியமும் பற்பல அர்த்தங்களை சொல்லத்தக்கவை. இதனை படித்தல், பின்பற்றுதல், சிந்தித்தல் ஆகியவை நம் சாதனைகளுக்கு ஒரு வழிகாட்டியாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

**பால்குண சுத்த தசமி**

**தத்வவாத**

தத்வவாதம் யதார்த்தமானது. இந்த சித்தாந்தத்தை மறுபடி நிறுவு வதற்காக அவதரித்தவர் ஆசார்ய ஸ்ரீமத்வர். இந்த தத்வவாதத்தின் சாரத்தை தொகுத்து ஜகன்னாததாசர் சொல்வது இப்படி.

பஞ்சபேதாத்மக ப்ரபஞ்சகெ
பஞ்சரூபாத்மகனே தெய்வக
பஞ்சமுக சக்ராதிகளு கிங்கரரு ஸ்ரீஹரிகே |
பஞ்சவிம்சதி தத்வதரதம
பஞ்சிகெகளனு பேள்த பாவி வி
ரிஞ்சியெனிபானந்த தீர்த்தர நெனெவெ அனுதினவு || (1-9)

மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய சித்தாந்தத்தை தயாரித்து, அதனை தொகுத்து, சஜ்ஜனர்களுக்குக் கொடுத்து, அனைவரையும் மகிழ்ச்சிக்கு உள்ளாக்கியவரே 'ஆனந்ததீர்த்தர்'. ஹரிசர்வோத்தம. நற்குணங்களைப் பெற்றவனாகி, எவ்வித தோஷங்களும் அற்றவனாகி இருப்பவன் ஸ்ரீஹரி என்று கூறினார். இந்த தத்வவாதத்தை ஸ்ரீவியாசராஜர் ஒரே ஸ்லோகத்தில் சொன்னது இவ்வாறு:

ஸ்ரீமன் மத்வமதே ஹரி: பரதர: சத்யம் ஜகத் தத்வதோ
பேதோ ஜீவகணா: ஹரே: அனுசரா: நீசோச்சபாவம் கதா: |
முக்தி: நைஜசுகானுபூதிரமலாம் பக்திஸ்ச தத்சாதனம்
ஹ்யக்ஷாதி த்ரிதயம் ப்ரமாணமகிலம் நாயைக வேத்யோ ஹரி: ||

'சத்ய ஜகதிது பஞ்ச பேதவு நித்ய ஸ்ரீகோவிந்தன' என்னும் கிருதியில், ஸ்ரீபுரந்தரதாசர் இந்த சித்தாந்தத்தின் தத்வங்களை தொகுத்து சொல்லியிருக்கிறார். ஹரிகதாம்ருதசாரத்தில் ஸ்ரீஜகன்னாததாசர் இந்த சித்தாந்தத்தை மிகவும் சிறப்பாக விளக்கியிருக்கிறார். அனைத்து ஹரிதாசர்களும் மத்வ மதத்தை பின்பற்றுபவர்களாக, இந்த தத்வவாதத்தை பல்வேறு வகையாக பாடியிருக்கின்றனர். இந்த சித்தாந்தத்தை உலகத்திற்குக் கொடுத்த ஜகத்குருகளைப் பற்றி ஸ்ரீவாதிராஜர்:

நின்ன மதவே வேதஷாஸ்த்ரகள சம்மதவு
நின்ன மதவே இஹபரங்களிகெ சாதனவு
பன்னங்கசயன ஸ்ரீஹயவதன தாசரொளு
நின்ன போலுவருண்டே மத்வமுனிராய ||

மத்வசாஸ்திரவ ரசிஸிதனோ சத்வைஷ்ணவ சலஹிதனோ |
உடுபிகிருஷ்ணன நிலிஸிதனோ புரந்தரவிட்டலன தாசனோ || - ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீமதாசார்யர், தமது சர்வமூல கிரந்தங்களில், டீகா வியாக்யான பரம்பரையில், ஹரிதாச சாகித்ய பரம்பரையிலும் - போற்றி புகழ்ந்து பேசப்படும் சாஸ்திர விஷயங்களே தத்வவாதம். பல்வேறு சந்தேகங்களைக் கிளப்பும் கு-மதங்களைக் கண்டித்து, அவற்றிற்கு தக்க பதில்களைக் கூறும் தத்வவாதத்தை உலகத்திற்குக் கொடுத்து, ஹரியே சர்வோத்தமன், இந்த உலகம் உண்மையானது, வேறுபாடுகளைக் கொண்டது என்று நிரூபித்தார் ஸ்ரீமத்வர். அந்த ஹரியே சர்வோத்தமன். அவனின் பிரதிபிம்பனான வாயுதேவரே ஜீவோத்தமர்.

**பால்குண சுத்த ஏகாதசி**
**எப்போதும் நினையுங்கள்**

ஸ்ரீவிஜயதாசர் தமது ஒரு சுளாதியில், எந்த காலத்தில் எந்த பகவத் ரூபங்களை சிந்திக்க வேண்டுமென்று ஒரு எளிமையான பட்டியலைக் கொடுத்திருக்கிறார். 'சந்ததம் சிந்தயேனந்தம்' அதாவது எப்போதுமே ஸ்ரீஹரியை நினைத்திருக்க வேண்டும் என்பதே குறிக்கோள்.

தாளம்: மட்ட
ப்ராத: காலதல்லி நாராயணனென்னி
ஶ்ரீதுளசியல்லி விஷ்ணுவின ஸ்மரணே மாடி
மூத்ர புருஷ விசர்ஜன சமயதல்லி
நீ திளியோ கேஷவனாமக ஹரிய
மாது மரியதிரு மிருத்திகா சௌசக்கெ
ஶ்ரீத்ரிவிக்ரமனோ, தந்ததாவன ஹரி
நீதுர மொதலாத ப்ரக்ஷாலனக்கெ மாதவ
கோதண்டவரிசுவ காலக்கெ கோவர்த்தன
வாதனோடிய நம்ம விஜயவிட்டலமூர்த்திய
மாத்ர காலபிடதே நெனெஸி தன்யனாகோ ||

தாளம்: ரூபக
நத்யாதி ஸ்னானமாடுவ காலக்கெ வராஹ
ஊர்த்வ புண்ட்ரகளல்லி கேஷவாதி மூர்த்தி
முத்ரெ இடுவாக க்ருத்தோல்காதி ஐது
சந்த்யா சந்த்யா காலதல்லி ராமனென்னு
சித்தவாகி ப்ராணக்ராசதல்லி அனி
ருத்தாதி பஞ்சபகவன் மூர்த்திகள ஸ்மரிசு
முத்தெ முத்தெ கவள மெலுவாரம்பதலி வா
சுதேவ, அபோஷனகளல்லி ஶ்ரீஹரி
பொத்துடுவ வஸ்த்ரதலி உபேந்த்ர பக
வத்ரூப சிந்திஸு, உபவீத வாமன
சுத்தமங்களார்தி கொம்பாக பார்கவ, வை
ஷ்வதேவாதியல்லி இதே மூர்த்தி நிஸ்சய
நிர்தோஷ தீர்த்ததல்லி கிருஷ்ண ராம வியாஸ
நிர்தாரத்ரிவார, ஷங்கோதக முகுந்த
பத்ரமூர்த்தி நம்ம விஜயவிட்டலரேயன
ஹ்ருத்குஹதொளல்லி நெனிஸி சந்தோஷவனனுபவிஸு ||
-- ஶ்ரீவிஜயதாசர்

**பால்குண சுத்த த்வாதசி**

**குருசேவை**

வைதிக உலகத்தில், குரு சிஷ்ய உறவிற்கு மிகச் சிறந்த இடம் கொடுக்கப்பட்டுள்ளது. இதற்கு முக்கிய காரணம், புரந்தரதாசரின்

வாக்கு ‘குருவின குலாம ஆகுவ தனக தொரெயதண்ண முகுதி’. குருவின் அருளே அனைத்து சாதனைகளுக்கும் ஏணி. கீதோபதேசத்திற்கு முன் அர்ஜுனன் கேட்டது - ‘சிஷ்யஸ்யேஹம் ஷாதிமாம் த்வாம் ப்ரபன்னம்’ என்று, சிஷ்யர்களுக்கு உண்மையான அறிவு கிடைப்பதே குருவிடமிருந்து. மொத்தத்தில் ‘சோத்தமா: குருவ: ப்ரோக்தா:’ என்னைவிட உயர்ந்தவர் குரு. பகவந்தன் மேல் பக்தி மற்றும் அவனின் அருளுக்கு முதலில் குருவருள் தேவை. குருவிற்கு செய்யும் சேவையினால் மட்டுமே அனைத்தும் கிடைக்கும். இதையே விஜயதாசரின் வாக்குகளில் பார்ப்போம்.

தாசர நிஜ காருண்ய பாத்ரனு நானு
தாசர ஹெப்பாகில முந்தெ காயுவவ நானு
தாசர மனெயல்லி அங்களதொளெவவ நானு
தாசர போஜனஷாலெ சம்மார்ஜனகெய்வ நானு
தாசர சதனக்கெ ஜலவாஹக நானு
தாசர பூஜாசாதன த்ரவ்ய தருவவ நானு
தாசர ஊடதெலெ எஞ்சலு தெகெவவ நானு
தாசர பளியல்லி சம்மோகதவ நானு
தாசருண்டத்தெ உண்டு தாசருட்டத்தெ உட்டு
தாசராடித்தெ எனகெ வேதவாக்யவெந்து
லேசாகி பேளிகொளுதலித்தவர சங்க
லேஷ பிடதெ காலகளெத ஞானிகளிவர
தாசதாசீஜனர எல்லெல்லிகெ நிஜ
தாச தாசனு நானு அனந்த ஜனுமதலி
பூஷண எனகிதெ மத்தாவ சம்பத்து
தூஸி ப்ராப்த வாகலதரிந்த லாபவேனு
தாச ஜனர ப்ரீய விஜயவிட்டலரேயன
தாசனாதவனிகெ அவுது கொரதெ காணே ||

வாணிபதிய ஜனகெ விஜயவிட்டலரேய
தானாகி ஒலித குருபக்தி உள்ளவரிகெ || -- ஸ்ரீவிஜயதாசர்

‘குருப்ரசாதோ பலவான்’ என்பது அனைவரும் ஒப்புக்கொண்டது. ‘முகுந்த பக்த்யை குருபக்தி ஜாயை’ என்பதே மேலே சொன்ன அனைத்திற்கும் ஆதாரம். பின்பற்ற வேண்டியவை.

**பால்குண சுத்த த்ரயோதசி**

**தர்மம் சர**

‘ஸ்வல்பமஷ்யஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத்’ என்று ஸ்ரீகிருஷ்ணன் கீதையில் சொன்னதை, ஸ்ரீபிராணேசதாசர் கன்னடத்தில் இவ்வாறு சொல்கிறார்.

ஸ்வல்ப தர்மவு ஞானதிந்தலி மாடலு பிரம்ம
கல்ப பர்யந்த சுக உண்டு நனகெ ||

எந்த செயல்கள் நம்மை மேம்படுத்தும் வழியில் கொண்டு செல்கிறதோ, அதுவே தர்மம். அதற்கே ‘தர்மஸ்ய வசனம் ஸ்ரேய: தர்மஞானந்து துஷ்கரம்’ என்று கூறினர். இதற்கு இணையான தாசரின் வாக்கு:

தர்மவே ஜயவெம்ப திவ்யமந்திர |
மர்மவன்னரிது மாடலு பேகு தந்த்ர || -- ஸ்ரீபுரந்தரதாசர்

சாஸ்திரங்களில் ‘க்ருஹீத இவ கேஷேஷு ம்ருத்யுனா தர்மமாசரேத்’ என்று சொல்கின்றனர். இதையே புரந்தரதாசர் :

ஈட மாடெலோ தர்ம நாளெ எந்தெனபேட
நீவாரு நாவாரு எலெ மனுஜ |
ஊளிதவரெம்ப படரு பந்தெளெவாக நாளெ
மாபெனெனெ பிடுவரே மனுஜ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஆனால் இந்த கலிகாலத்தில், சாதாரண மனிதன் எப்படி இருக்கிறான் என்பதை:

தர்மக்கெ காசு சாசிர ஹொன்னு |
அதர்மக்கெ கோடி ஹொன்னு காசு |
தர்மமாடுவல்லி ப்யாஸரிகெ |
அதர்ம மாடுதல்லி நலிதாட || -- ஸ்ரீநரஹரிதீர்த்தர்

அதற்கே ஸ்ரீபுரந்தரதாசர் நமக்கு சன்மார்க்கத்தை இவ்வாறு காட்டுகிறார்.

தாளி பாரத முன்ன தர்மவ களிஸிரோ
ஹாளு சம்சாரத சுளிகெ சிலுகபேடி ॥ ஏனெனில்

காலனதூதரு கால்பிடிது எளெவாக
தாளு தாளெந்தரே தாளுவரே ॥ - என்று சொல்லி எச்சரிக்கிறார்.

சத்யதர்மகளெல்ல எத்தபோதவோ காணே ।
உத்தமர ஜீவனகெ தாரியில்ல ॥ என்று சொல்லி

தான தர்ம பரோபகார மாடு ।
தீனனாகி நீ கெடபேடவோ ॥ என்கிறார் கனகதாசர்

ஒரு ஜீவனுக்கு எதிலிருந்து சுகம் கிடைக்கிறது என்பதை ஒரு பாடலில் இவ்வாறு சொல்கிறார்.

மனுஜ சரீரவிதேனு சுக । இது நெனெதரெ கோரவிதேனு சுக ।
புரந்தரவிட்டலன நெனெது ச । த்தர்மதொள் நடெதரெ ஆக சுக ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

**பால்குண சுத்த சதுர்தசி**
**கர்மங்களின் சமர்ப்பணம்**

அனைத்து செயல்களையும் ஜீவர்கள் பகவந்தனுக்கு அர்ப்பிக்க வேண்டும். இது தத்வம். 'க்ஷேமம் ந விந்தந்தி வினா யதர்பணம்' - பாகவதம்.

ஏனு மாடுவ புண்யபாபக
ளானே மாடுவேனெம்புவனதம
ஹீனகர்மகெ பாத்ர நா புண்யக்கெ ஹரியெம்ப
மானவனு மத்யமனு த்வந்த்வக்கெ
ஸ்ரீனிவாசனெ கர்த்ருவெந்து ச
தானுராகதி நெனெது சுகிசுவவனே நரோத்தமனு ॥ (13-8)

கர்மங்களை சமர்ப்பிப்பதில், முக்தியோக்யருக்கும் மற்றவருக்கும் இருக்கும் வித்தியாசத்தை சொல்கிறார். அனைத்தையும் செய்விப்பது பகவந்தன். அதற்கே தாசர், ஜீவர்கள் செய்யும் செயல்களை ஹரிபூஜை என்றார்.

ஞான கர்மேந்திரியகளிந்தெ
நேனு மாடுவ கர்மகளு ல
க்ஷ்மீ நிவாஸன பூஜெயெந்தர்ப்பிசத மானவனு || (13-6)

ஸ்ரீகிருஷ்ணன், அர்ஜுனனுக்கு உபதேசிக்கும்போது கூறியது:

யத்கரோஷி யதஷ்னாஸி யஜ்ஜஹோஷி ததாஸியத் |
யத்தபஷ்யஸி கௌந்தேய தத்குருஷ்வமதர்பணம் || கீதை 9-27

நற்சிந்தனையுடன் செய்யப்படும் அனைத்து செயல்களையும் கிருஷ்ணார்ப்பணம் என்று சொல்லி அர்ப்பிக்கவேண்டும். இதைப் பற்றி விஜயதாசர் தமது சுளாதியில் சொல்வது:

சர்வசமர்ப்பணெ மாடு முக்தியா பேடு
சர்வாதிஷ்டானா த்ரிவித திளிது
சர்வக்ஞ ஹரி எந்து த்ரிகர்ணாவாகி நுடிது |
ஞானவந்தனாகி சர்வசமர்ப்பணெ
ஸ்வானுபாவக்கெ நித்யா தந்துகொம்புவ மனகெ |
எஷ்டு மாடிதரேனு நிர்குணனாகி மன
முட்டி சர்வார்ப்பிதனென்னதனகா
கிருஷ்ண மெச்சனு காணோ கதிகெ சாதனவல்லா ||

சஜ்ஜனர்களுக்கு சமர்ப்பணம் பற்றி ஜகன்னாததாசர் சொல்வது:

ஏனுமாடுவ கர்மகளு லகு
மீனிவாசனிகர்ப்பிசலு சன்
தான பூர்வகதிந்த சந்தேஹிசதெ தினதினதி || (5-38)

காயேன வாசா ... நாராயணாயேதி சமர்ப்பயாமி ||

**பால்குண பௌர்ணமி**

**கக்ஷா தாரதம்ய**

ஆகமங்களில் நிறுவப்பட்டுள்ள தத்வம் ஜீவர்களின் தாரதம்யம். 'தாரதம்ய பரிஞானே மஹாதாத்பர்ய மிப்யதே' என்று கூறினார். இதையே ஜகன்னாததாசர்:

தாரதம்யாத்மக சுபத்யக
ளாரு படிசுவரா ஜனரிகெ ர
மாரமண பூரெயிசலேப்சித சர்வகாலதலி || (32-54)

தாரதம்யத்தை அறிந்து, ஹரி சர்வோத்தமத்தை அறிவதே முக்திக்கான வழி. இதை சஜ்ஜனர்கள் தினந்தோறும் பக்தியுடன் சொல்ல வேண்டும் என்கிறார்.

தேவதைகளின் கக்ஷ தாரதம்ய

1. ஸ்ரீஹரி - சர்வோத்தமன், சர்வேசனான மகாவிஷ்ணு
2. ஸ்ரீமகாலட்சுமி - நித்யமுக்தள், ஸ்ரீஹரியை வணங்குபவள்
3. நான்முகப் பிரம்மன், வாயு - ஜீவோத்தமர், ருஜுபுங்கவர்கள்
4. சரஸ்வதி, பாரதி - பிரம்மபத்னி, வாயுபத்னி, ருஜுகள்
5. ஸ்ரீகருட - ஹரியின் வாகனம்
சேஷ - ஹரியின் சயனம்
ருத்ரர் - லயத்தின் காரணர். மனோ நியாமகர்
6. ஸ்ரீகிருஷ்ணனின் மஹிஷியர்கள் - ஜாம்பவதி, காளிந்தி, நீளா, மித்ரவிந்தா, பத்ரா, லக்ஷணா
7. சௌபர்ணி (கருட பத்னி), வாருணி (சேஷ பத்னி), பார்வதி (ருத்ர பத்னி)
8. இந்திரன் (சுவர்க்க அதிபதி), காம (விஷய அபிமானி)
9. அஹங்காரிக பிராண (த்வக் அபிமானி)
10. அனிருத்த (காம புத்ரன்), குரு (சுரர்களின் குரு), தக்ஷ (பிரம்ம புத்ரன்), ஸ்வாயம்புவ மனு (பிரம்ம புத்ரன்), சசி, ரதி (இந்திரன் & காமனின் மனைவியர்).
11. ப்ரவஹ வாயு
12. யமதர்மன் (நரக லோகாதிபதி), விவஸ்வான், சந்திரன், ஷதரூபாதேவி (ஸ்வாயம்புவ பத்னி)
13. வருணன் (ஜல அபிமானி)
14. நாரதர் (தேவ ரிஷி, பிரம்ம புத்ரர்)
15. ப்ருகு ரிஷி (பிரம்ம ரிஷி), அக்னி (தேஜஸ் அபிமானி), ப்ரஸூதி (தக்ஷ பத்னி)
16. பிரகலாதன்,
மரீசி, அத்ரி, அங்கிரஸ, புலஸ்த்ய, புலஹ, க்ரது, வசிஷ்ட ஆகிய ரிஷிகள்,

விஷ்வாமித்ர, வைவஸ்வத மனு (14 மனுக்களில் ஒருவன்)
17. மித்ர (12 சூரியர்களில் உத்தமர்), நிரருதி (திக்பாலகர்), தாரா (குருபத்னி), ப்ராவஹீ (ப்ரவஹவாயு பத்னி).
18. கணேசர் (ஆகாச அபிமானி), விஷ்வக்சேன (தேவதைகளின் சேனாதிபதி), குபேரன் (தனாதிபதி), அஸ்வினி தேவதைகள் (தேவ வைத்யர்கள்), சேஷசதஸ்தர் (85 பேர்).

இதுவரை தத்வாபிமானி தேவதைகளின் கக்ஷம் முடிந்தது.

19. கர்மஜ தேவதைகளின் கக்ஷம்
ஜயந்த (அக்னிபுத்ரன்), ஷத ராஜர்கள் (இந்த்ர புத்ர),

20. கங்கா (வருண பத்னி), சஞ்ஞா (விவஸ்வான் பத்னி), ரோஹிணி (சந்திர பத்னி), ஷ்யாமளா (யம பத்னி), உஷா (அனிருத்த பத்னி), பர்ஜன்ய (12 சூரியர்களில் ஒருவர்).

21. அவ்வளவு முக்கியமில்லாத தேவதைகள்

22. ஸ்வாஹா (அக்னி பத்னி)
23. புதன் (சந்திர புத்ரன்)
24. உஷா (அஸ்வினி தேவதைகளின் பத்னி), தேவகி (வசுதேவ பத்னி), யசோதா (நந்தகோபரின் பத்னி)
25. சனீஸ்வரன் (சூர்ய புத்ரன்), ஸ்ரீதரா (ப்ருத்வி அபிமானி)
26. புஷ்கர (சுகர்மங்களின் அபிமானி)
27. அஜானஜ தேவதைகள்
28. சிர பித்ருகள்
29. தேவகந்தர்வாதிகள்
30. மனுஜ கந்தர்வர்கள்
31. மனுஷ ராஜர்கள்
32. மனுஷ்யோத்தமர்கள் முதலானவர்கள்

நமோஸ்து தாத்விகா தேவா: விஷ்ணுபக்தி பராயணா: |
தர்மமார்கே ப்ரேரயந்து பவந்த: சர்வ ஏவஹி ||

ஈ மஹீமண்டலதொளிஹ குரு
ஸ்ரீமதாசார்யர மதானுக
ராமஹா வைஷ்ணவர விஷ்ணுபதாப்ஜ மதுகரர |

ஸ்தோமகானமிசுவேனவரவர
நாமகளனெம்பேள்வே பஹுவித
யாமயாமங்களலி போதிசலெனகெ சன்மதிய || (32-53)

## பால்குண பகுள ப்ரதமை
## ஸ்ரீசத்யபோத தீர்த்தரின் ஆராதனை

'ப்ரதிகாணே நிம்ம மஹிமெகெ சத்யபோத' - ஸ்ரீசத்யபோத தீர்த்தரைப் பற்றிய ஸ்ரீஜகன்னாத தாசரின் வாக்கு. ஸ்ரீமன் மத்வா சார்யரின் மூல மஹா சம்ஸ்தானத்தில் வீற்றிருந்த யதிவரேண்யர் ஸ்ரீசத்யபோதர். சிறந்த அறிஞர். பல மகிமைகளைப் புரிந்து, ராயரைப் போலவே ஹரிதாச சாகித்யத்தின் இரண்டாம் கட்டத்தின் முக்கிய யதிகளாக இருந்தவர்.

ஒருமுறை கோபாலதாசர் தமது சகோதரர்களுடன், ஸ்ரீசத்ய போதரின் தரிசனத்திற்காக வந்திருந்தபோது, ஒரு சம்பவம் நடந்தது. கோபாலதாசர், சீனப்பதாசர் மற்றும் தாசப்பதாசருக்கு, ஸ்ரீகளவர் தனித்தனியாக கிருதிகளை இயற்றிக் காட்டுமாறு கேட்டுக்கொண்டார். அதன்படியே மூவரும் இயற்ற, அவற்றை படிக்குமாறு கேட்டுக்கொண்டார். ஆச்சரியம் என்னவென்றால், இந்த மூவரின் பாடலும், ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டு, ஸ்ரீசத்ய போதரின் மேல் இயற்றப்பட்ட ஒரு பாடலாக அமைந்தது. மூன்று நுடிகள் கொண்ட இந்த பாடலில் - பல்லவி மற்றும் கடைசி பத்தி கோபாலதாசருடையதாகவும், மற்ற இரண்டு பத்திகள் இருவருடை யதாகவும் இருந்தன. தாசரின் திவ்ய ஞானத்துடன், ஸ்ரீபாதங் களவரின் தபஸ் சக்தியையும் இந்த சம்பவம் காட்டுகிறது.

ராகம்: அசாவேரி. தாளம் : ஜம்பே
மாரமதகன்ன சம்மீர மத்வமதோ
த்தார ஷுபகுண சாகராபார ||ப||

தீர ஸ்ரீசத்யபோதார்ய | குருகருணதலி
வைரிவர்கவகெலிதெ தாருணியொளு மெரெதெ ||அப||
(ஸ்ரீகோபாலதாசர்)

முனி நிம்ம மஹிமெயனு திளியதலெ தண்ட எத்தி

மனசிஜனு பரலு கேளி தாளி
கனமஹிம சத்யப்ர்யகுரு கருணத்ருடகவச

வனு தரிஸி தீரனாகி, சாகி
மனோஜயாத்யஷ்டாங்க யோகாதி சாதனதி
மணியதலெ மாரமலதோ கலது
ப்ரணவாதி மந்த்ர ப்ரதிபாத்யமூர்த்திகள சமோ
மானெ மாடி அரிப்ருதன ஹணிது ஓடிசதெ ||1||
(ஸ்ரீசீனப்பதாசர்)

குசுமாஸ்த்ரானங்கனாகலு உடுசஹித ஹிமகு
நெஸகி நபகைதினிந்த மந்த
ஸ்சசன மெல்லனெ ஜரிது வனகெ போத வசந்த
ஜபவு ஷுக பிக சமூஹகளஞ்சே பாய்சிடுத
தசதிஷெயொளடகி போகி கூகி
சமல்லிகாதி குட்மலவஞ்சே பாய்சிடலு
யஷஷரதி, தவகீர்த்தி பசரிசிது லோகதொளு ||2||
(ஸ்ரீதாசப்பதாசர்)

மாரனபஜய கண்டு க்ரோதாதி வர்ககளு
தூரதலி நிந்து நமிஸி, கமிஸி
வீரகர்ணனு தன்ன மீரி த்யாகவகண்டு
சாரெ ரவிமண்டலவனு அவனு
தீர நிம்ம பாண்டித்யகம் கணிப வாகி ஷிர
தாருணிய கெளகி நடெத, பிடதா
ஸ்ரீராமவியாஸ கோபாலவிட்டலனங்க்ரி
ஆராதகரெ நிம்ம சாருசணகெ நமிபே ||
(ஸ்ரீகோபாலதாசர்)

ஸ்ரீசத்யபோதர் செய்து காட்டிய மகிமைகள் பற்பல உண்டு. நூற்று க்கும் மேற்பட்ட பண்டிதர்களை தயார் செய்தவர். சமகாலத்திய ஹரிதாசர்களுக்கு ஒரு நல்ல வழிகாட்டியாக இருந்து அருளினார். சில ஹரிதாசர்களின் சில வரிகளை மட்டும் பார்ப்போம்.

மதிஸி பேடுவே வரவ கரவ முகிது |
சதத லகுமி பதிய பகுதி ஒந்தே இரலி || விஜயதாசர்:

அவனீதுரு மூர்ககஜதொளு முக ।
பாவன குரு சத்யபோத யதீந்திரகின்ன ॥ மோஹனதாசர்.

சத்யபோதரெம்ப சத்குரு சரணவ । சித்ததொளிட்டு சரிசுவ கோலே । சித்ததொளிட்டு ஸ்மரிசினா பேள்வேனு । சித்ததொல்லபன சரிதெய கோலே ॥

நா தன்யனாதெனெந்து சத்யஸ
போதராயர திவ்யபாத கமலவ கண்ட ॥ ஜகன்னாததாசர்:

**பால்குண பகுள த்விதியை**
**முக்யபிராணரிடம் வேண்டுவோம்**

ஜகத்ராண, ஜகதொளகெ சுத்ராண, அகிலகுண சத்தாம, ஜகத்குரு, ஜகத்ரட்சகன், ஜீவோத்தமன் - முக்யபிராணதேவர். ஸ்ரீஹரியின் நேரடி பிரதிபிம்பர். இவர் மூலமாகவே ஸ்ரீஹரியை அடைய முடியும். இத்தகைய முக்யபிராணரிடம் கேட்க வேண்டியது:

நின்ன மத பொந்திஸு நின்ன சின்ஹெய தரிஸு
நின்ன ஷாஸ்த்ரதொளென்ன முளுகாடிஸு
நின்ன மூர்த்திய தோரிஸு
நின்ன வியாப்தத்வ சென்னாகி திளிஸு
இன்னு தினதினதி என்னிந்த மாடித கர்ம
நின்ன அந்தர்யாமிகொப்பிஸோ
பின்னபவ லாலிஸு கன்ன தயாளுவெ
நின்ன ஹொரது எனகெ அன்யகதி இல்லா ॥ (ஸ்ரீகோபாலதாசர்)

இதற்கு முக்யபிராணரே எதற்கு? வேறு யாராலும் முடியாதா என்ற கேள்விக்கு தாசரின் பதில்:

நீனு பிடியலு ஹரியு தானு பிடிவனு
நீனு முனிதரெ ஹரியு தானு முனிவா
நீனு மாடித கர்ம நம்ம நின்ன ஒடெயகெ கர்ம
நீனு இத்தரெ ஹரி தானு இருவ
நீனு பிட்டரெ ஹரியு தானு பிட்டோடுவ
நீனித்ததது மேனாதத்தெல்ல ஞான சுகதாய நிதான முக்திப்ரதாய

தீனரக்ஷக குருவே தானி கல்பதருவே ||(ஸ்ரீகோபாலதாசர்)

இத்தகைய, ஸ்ரீஹரியின் பிரதிபிம்பரான, நண்பரான முக்ய பிராணரிடம் வேண்டிக் கொள்ள வேண்டியதாக தாசர் சொல்வது:

ஷரணு ஹரிய ஷரணக்ரேஸரனெ ஹனும பீம மத்வகுருவே
நிம்ம சரணகமலகெரகி நமிசுவே ||(கோபாலதாசர்)

பரமாதரதலி கருணயனமேலே
ஹரஹிதுரமதி பரிபரிசுவுது ||(ஸ்ரீவிஜயதாசர்)

நீனே வரகுரு முக்யபிராண |
நிரந்தரவு நம்பிதேனு ||
கங்கேபித ஸ்ரீகிருஷ்ண பதப்ருங்க மூர்ஜகதொளகெ |
துங்க பவபங்க தயாபாங்க யதிபுங்கவனே ||(ஸ்ரீவியாசராஜர்)

**பால்குண பகுள த்ருதியை**
**ஸ்ரீவாதிராஜரின் ஆராதனை**

தபோவித்யா விரக்த்யாதி சத்குணௌ காகரானஹம் |
வாதிராஜ குரூன்வந்தே ஹயக்ரீவ தயாஸ்ரயான் ||

வேதாந்த உலகில் நாம் கண்ட சுத்தமான, புகழ்பெற்ற, மிகச்சிறந்த அறிஞர், யதிவரேண்யர் - ஸ்ரீவாதிராஜர். பலதரப்பட்ட திறமைகள், அனைவராலும் புகழப்பட்ட இவர் 120 ஆண்டுகள் வாழ்ந்து சஜ்ஜனர்களுக்கு அருளினார். இரு மொழிகளிலும் திறன் படைத்த இவரது சாகித்யம் ஒப்பிடமுடியாதது . டீகை, டிப்பணி, ஸ்வதந்த்ர கிரந்தங்கள், ஸ்தோத்திரம், கன்னடத்தில் பாடல்கள், காவியங்கள் என இவர் இயற்றியது பற்பல உள்ளன. இவரது மகிமைகளும் அபாரம். இத்தகைய சிறந்த புருஷரின் சிந்தனை நமதாகவேண்டும்.

ஸ்ரீவிஸ்வேந்திர தீர்த்தரின் வாக்கு:
ஜன்ம சபல காணிரோ
நம்ம குரு வாதிராஜராயர கண்டு ||
வியாசகூடகளல்லி ஸ்ரேஷ்டராகிஹரு
தாசகூடகளல்லி ரத்னதந்திஹரு
பாசுர காமதி நூரிப்பத்து

வர்ஷ தரெயொளகெ மெரெதிஹரு

ஸ்ரீவாதிராஜரின் பிரசிஷ்யரான ஸ்ரீவேதநிதி தீர்த்தர், தனது அனைத்துமே இவர் என்கிறார்.

மாதா ராஜா மத்பிதா வாதிராஜ:
ப்ராதா ராஜா மத்சகா வாதிராஜ:
சர்வஸ்வம் மே வாதிராஜோ தயாலு
ர்னான்யதெய்வம் நைவ ஜானே ந ஜானே ||

க்ஷிதியார துர்வாதிகள ஜயிஸித அ
ப்ரதிம மஹாரதிகனெனிசுவ சக்ரவர்த்தி ராஜா ||
(ஸ்ரீப்ரசன்ன வேங்கடதாசர்)

ஸ்ரீமத் உத்தராதி மடாதீசரான ஸ்ரீசத்யதர்மதீர்த்தர் தம் பூர்வாசிரமத்தில் இயற்றிய கிருதியில் ஸ்ரீராஜரை இவ்வாறு புகழ்ந்திருக்கிறார்.

கதா புண்யாரண்யே ஷுப தவலகங்கா பரிசரே
சரன் தூரே: சேவா ஜனித பரமானந்த பரித: ||
ஆயி சம்வித்ஸ்வாமின் ஹயவதன வாதீசவரத
ப்ரசீதீதி க்ரோஷன்னிமிஷமிவ நேஷ்யாமி திவசான் ||

ஸ்ரீவாதிராஜ யதிவரேண்யரின் அற்புத மகிமைகள் பற்பல உள்ளன. அவரிடம் இருந்த பாண்டித்யம், தவம், வாத்ஸல்யம், தீக்ஷை, சாதுர்யம், பகவத்பக்தி, விரக்தி ஆகிய மிகச்சிறந்த நற்குணங்களைப் பெற்ற இவர், அஷ்டமடங்களின் வழிகாட்டியாகவும் விளங்கினார். வியாச சாகித்யத்தைப் போலவே, தாச சாகித்யத்திற்கும் இவர் செய்த அருள் அனேகம். சிறிய கீர்த்தனையில் துவங்கி, நீண்ட கிருதிகளை இயற்றி, சாகியத்திற்கு அருளி, அதனை கடைத்தேற்றிய மகான் இவர்.

இவருக்குப் பிறகு வந்த உரையாசிரியர்கள், விஜயதாசர் துவங்கி பற்பல ஹரிதாசர்கள் என அனைவரும் இவரைப் பாடி புகழ்ந்திருக்கின்றனர்.

துரிதராசிகள சீளி ஹொார தெகெது மருதஷாஸ்த்ரவனெ பேளு

பரமார்த்த மார்கவதோரி சுகபடிஸி தரெயொளகெ மெரெத தீர ।
த்ரிஜகதொளிவரிகெ எணேகாணே குஜன மத சோலிசுவல்லி
விஜயவிட்டலனே த்ருவவெந்து த்வஜவெத்தி திருகித முனிப ॥
(ஸ்ரீவிஜயதாசர்)

மோதமுனிமத பயோநிதிபூர்ண
விதோதய ஷரணர காதுகோ தொரெயே ॥

வாதிராஜ ப்ரதிவாதி கஜேந்திர ம்ரு
காதிராஜ விபுதோதிர சந்த்ர ॥ (ஸ்ரீஜகன்னாததாசர்)

மத்வமத ஷுபவார்த்தி சந்திரகெ நித்ய நிர்மல நிகமஸ்தோத்ரகெ ।
ப்ருத்ய பாலகெ சுகுணகாத்ரகெ சத்யலோக சுமுக்ய பாத்ரகெ ।
ஸ்துத்யயதிவர சுஜனமித்ரகெ ஷரணு ஷரணு ஷரணய்ய ஷரணு ॥
(ஸ்ரீகுருஜகன்னாததாசர்)

நின்ன நெனெமெ தன்ய நின்ன பாடலு மான்ய
நின்ன கொண்டாடலு பாபஷூன்ய ॥
(ஸ்ரீபங்க நாமத திம்மண்ண தாசர்)

## பால்குண பகுள சதுர்த்தி
## ஸ்ரீவியாசராஜரின் ஆராதனை

அர்த்திகல்பித கல்போயம் ப்ரத்யர்த்தி கஜகேசரி ।
வியாசதீர்த்த குருர்பூயாத் அஸ்மதிஷ்டார்த்த சித்தயே ॥

த்வைத சித்தாந்த இதிகாசத்தில் முனித்ரயர் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீமதாசார்யர், ஸ்ரீஜயதீர்த்தருக்குப் பிறகான இடத்தைப் பிடித்த, விபூதி புருஷர் ஸ்ரீவியாசராஜர். ஸ்ரீவியாசராஜரின் அவதாரத் திலிருந்து துவங்கி, அவரது வாழ்க்கை முழுவதுமே ஒரு அற்புதம், சுவாரசியம் ஆகும். அன்றிலிருந்து இன்று வரையிலான பரம்பரையே இவருக்கு தலைவணங்கியிருக்கிறது. மிகுந்த மரியாதையுடன், பணிவு, பக்தியுடன் அவருக்கு கடமைபட்டி ருக்கிறது. சித்தாந்தத்தின் வியாச தாச கூடத்திற்கு ஸ்ரீராஜர் செய்த அருள் பற்பல. எண்ணிக்கையில் அடங்காதது. ஸ்ரீபுரந்தரதாசரின் வாக்கு, அனைத்து பக்தர்களின் வாக்காகவே உள்ளது.

குருவியாசராயர சரணவெனகெ கதி |
புரந்தரவிட்டலன அரிதெ இவரிந்த ||

ஸ்ரீவியாசராஜரின் அற்புத ஆளுமையை சாதாரண மனிதரால் ஊகிப்பதும் அசாத்தியம். ஸ்ரீபிரம்மண்ய தீர்த்தர் போன்ற குரு, ஸ்ரீஸ்ரீபாதராஜர் போன்ற வித்யாகுருவைப் பெற்ற மகாத்மர். 12 ஆண்டுகள் திருப்பதியில் வெங்கடேசனை பூஜித்த தன்யாத்மர். சக்ரவர்த்திகளினால் போற்றப்பட்ட ராஜகுரு. கல்வியறிவின் சிகரம் என்று அழைக்கப்படும் வியாசத்ரய கிரந்தத்தை இயற்றியவர். விஜயீந்த்ர, வாதிராஜ போன்ற திமிங்கிலங்களை தயார் செய்தவர். தத்வவாதத்தின் மொழிபெயர்ப்பான ஹரிதாச சாகித்யத்திற்கு தலைவராக ஓம்காரம் போட்டவர். புரந்தரதாசர், கனகதாசர் ஆகியோருக்கு தாசதீக்ஷை அளித்து, சாகித்ய சங்கீத உலகிற்கு மறுபிறவி அளித்த மகாபுருஷர். ஸ்ரீஜயதீர்த்தருக்குப் பிறகு சித்தாந்தத்தை மறுபடி நிறுவிய சர்வக்ஞர்.

வாதம் செய்ய வந்தவர்களாலும் புகழப்பட்ட அறிஞர். யந்த்ரோத்தாரக பிராணனை நிறுவியவர். இவரைப் போலவே பற்பல பிராணரை நிறுவி பரம்பரையின் மகிமைகளை, ஆசார விசாரங்களை பரப்பி, வளர்த்த வணங்கத்தக்கவர். கர்னாடக சாம்ராஜ்யத்தின் ரத்ன சிம்மாசனத்தில் ஏறி, சக்ரவர்த்திகளினால் ரத்ன-அபிஷேகங்களை பெற்றவர். பேசுமொழியில் பல்வேறு கிருதிகளை இயற்றி, சாதாரணர்களும் சாதனை செய்யுமாறு அருளியவர். பாரதத்தின் நீள அகலத்திற்கும் த்வைத மதத்தை பிரசாரம் செய்து மக்களை ஆசிர்வதித்தவர். குருசார்வபௌம என்று அழைக்கப்பட்ட ஸ்ரீவியாசராயரை, பரம்பரையே பாடி கொண்டாடியிருப்பதை பார்க்கிறோம். புரந்தரதாசர் கூறியது இவ்வாறு:

வியாசராயர சரணகமல தருஷனவெனகெ
ஏசுஜனுமத சுக்ருத பல தொரகிதோ என்ன
சாசிர குலகோடி பாவன்னவாயிது
ஸ்ரீஷன்ன பஜிசுவுதகதிகாரி நானாதே
தோஷரஹிதனாத புரந்தரவிட்டலன
தாசர கருணவென்ன மேலே இரலாகி ||

ஸ்ரீவியாசராஜரின் வித்யாகுருவான ஸ்ரீஸ்ரீபாதராஜர், தம் சிஷ்யரைப் பற்றி கூறியதாவது:

சாசிர ஜிஹ்வெகளுள்ள சேஷனே கொண்டாடபேகு |
வியாசமுனிராயர சன்யாசதிரவ ||

துர்மதங்களை கண்டித்த ஸ்ரீவியாசராஜரைப் பற்றி குருவின் வாக்கு.
இதிரதாவுது நிமகெ வ்யாசமுனிராய |
பதுமனாபன தாச பரம உல்லாஸ ||
வாதிதிமிரமார்த்தாண்ட நெந்தெனிஸிதெ
யதிகளொளு நிம்மந்ததவருகள நா காணே ||

ஸ்ரீராஜரின் சன்யாசம், பாண்டித்யம் மற்றும் மகிமைகளைப் பற்றி ஸ்ரீபுரந்தரதாசர் கூறியது:

வாசுதேவன சரணவனஜவந்திதனெ சன்
நியாச ரத்னாகரனே துர்வாதிம்ருகபேருண்ட
வாதி பயங்கர துர்வாதிகோலாஹல
வைஷ்ணவோத்தமனே சத்வைஷ்ணவ ப்ரஜானந்த
வைஷ்ணவாகம பரித வைஷ்ணவ சுப்ரீத
வைஷ்ணவ கமல சூர்ய வைஷ்ணவகுமுத சந்த்ர
வைஷ்ணவ குலோத்துஷ்ட வைஷ்ணவ விசிஷ்ட ||

ஸ்ரீவியாசராஜரைப் பற்றி விஜயதாசர் தமது ஒரு கிருதியில் பாடியது இவ்வாறு:

வியாசராயர ஸ்மரிஸிரோ
வியாசராயர ஸ்மரிஸி ஏசு ஜன்மத பாப
நாஷவாகுவுது நிம்மாஸெ சித்திசுவுது
லேசாகி சுகிசி அனந்த வைகுண்டதலி
வாசவாகுவுது நிஜபகுதியலி ||
யந்த்ரோத்தாரகன ப்ரதிஷ்டிஸி விஜயீந்த்ர
சந்தவாதிராஜகொலிது, புரந்தர
இந்து சிஷ்யரன்னு படெது உபதேஷிஸி மந்த்ரசித்தியனெ கொட்டு
மத்வமதவெம்ப துக்தாப்திகெ புர்ணேந்து
மத்வவல்லப நம்ம விஜயவிட்டலன பாதத்வயவ பஜிசுவரு கேளி |

## பால்குண பகுள பஞ்சமி
## புருஷோத்தமனான ஸ்ரீஹரி

ஜீவ ஜடாத்மக பொருட்களினால் கூடியதே இந்த உலகம். இத்தகைய உலகத்தை படைத்தவர் ஒருவர் இருக்கிறார். அவரையே ஆகமங்கள் புருஷோத்தமன் என்று அழைக்கின்றன. இது மிகவும் முக்கியமான ஆதாரமாகும். இங்கு இருக்கும் சேதனர்களை இருவிதமாகப் பிரிக்கின்றனர். இதைப் பற்றி ஜகன்னாததாசர் தனது ஹரிகதாம்ருதசாரத்தில் கூறுவதாவது:

எரடு விததலி லோகதொளு ஜீ
வருகளிப்பரு சந்தத க்ஷரா
க்ஷர விலிங்க சலிங்க ஸ்ருஜ்யாஸ்ருஜ்ய பேததலி |
கரெசுவுது ஜட ப்ரக்ருதி ப்ரணவா
க்ஷர மஹத்தணு காலநாமதி
ஹரிசஹித பேதகள பஞ்சக ஸ்மரிஸு சர்வத்ர || (14-23)

உலகத்தில் க்ஷரர் (பிரம்மாதி சேதனர்கள்), அக்ஷரர் (அழிவில்லாத லட்சுமிதேவி) என்று இரு விதங்கள் உள்ளன. இந்த க்ஷாராக்ஷரர்களைப் பற்றி பகவத்கீதையில் ஸ்ரீகிருஷ்ணன் கூறுயிருக்கிறார்.

த்வாவிதௌ புருஷௌ லோகே க்ஷரக்ஷரக ஏவ ச |
க்ஷர: சர்வாணி பூதானி கோடஸ்தோக்ஷர உச்யதே || (15-16)

இரு வித புருஷர்கள், அந்த புருஷோத்தமரை விட கீழானவர்கள். இவனே உத்தமன், அனைவரைவிட வேறுபட்டவன்.

யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷராதபி சோத்தம: |
அதோऽஸ்மி வேதேச ப்ரதித: புருஷோத்தம: || (15-18)

க்ஷராக்ஷரர்களுக்கு அப்பாற்பட்ட நான் புருஷோத்தமன். ஆகமங்கள் என்னையே புகழ்கின்றன என்றார். இதையே தாசர்:

ஆதியல்லி ஹ்ருதக்ஷரக்ஷர
த்வேத அக்ஷரதொளு ரமா மது
சூதனரு க்ஷரகளொளு ப்ரக்ருதி ப்ரணவ காலகளு | (14-25)

அக்ஷரர்களில் நாராயண மற்றும் லட்சுமிதேவி இருவரும்; க்ஷரர்களில் பிரம்மாவில் துவங்கி இருக்கும் அனைவரைவிடவும் உத்தமர்கள். இப்படியாக க்ஷராக்ஷரர்களில் உத்தம புருஷன் என்று அழைத்து, புருஷோத்தமன் என்று, அனைத்து ஆகமங்களினால் அழைக்கப்பட்டார். எனில், ஸ்ரீஹரியே சர்வோத்தமன் என்றும் ஆயிற்று.

**பால்குண பகுள சஷ்டி**

**அனைத்தும் உனக்கே அர்ப்பணம்**

இந்த சாதனை சரீரத்தை, அதிலும் வைஷ்ணவ ஜென்மத்தை நமக்கு அளித்த ஸ்ரீஹரியினுடையதே இந்த தேகம், உள்ளிருக்கும் உறுப்புகள், நாடிகள் என அனைத்தும். அனைத்துமான அவனிடம், அனைத்தும் உன்னுடையதே ஸ்வாமி என்று சமர்ப்பிப்பது அனைவரின் கடமை. சாதனை ஜீவர்களுக்கு ஒரு உத்தம வழியினை காட்டுமாறு ஸ்ரீஹரியிடம் தாசர் கேட்பது இவ்வாறு:

நா நினகேனு பேடுவுதில்ல என்ன<br>
ஹ்ருதய கமலதொளு நெலஸிரு ஹரியே ||ப||

ஷிர நின்ன சரணக்கெரகலி சக்ஷு<br>
எரகதிந்தலி நின்ன நோடலி ஹரியே |<br>
நிருமால்ய நாஸ க்ராணிசலி என்ன<br>
கரண கீதங்கள கேளலி ஹரியே ||1||

நாலிகெ நின்ன கொண்டாடலி என்ன<br>
தோளு கரங்கள முகியலி ஹரியே |<br>
காலு தீர்த்தயாத்ரெகெ போகலி, மன<br>
ஓலயிஸி நின்னன்னு ஸ்மரிசலி ஹரியே ||2||

சித்த நின்னொளு முளுகாடலி நின்ன<br>
பக்த ஜனரசங்க தொரகலி ஹரியே<br>
தத்வ யோகாப்யாஸக்காகலி உக்தி<br>
சத்யமூருத்தி நம்ம புரந்தரவிட்டலா ||3|| --ஸ்ரீ புரந்தரதாசர்

ஸ்ரீமத் அக்ஷோபதீர்த்தர், தமது ஒரு கிருதியில் ‘ஸ்மர க்ருஷ்ணம் பஜஹரிம்’ நம் அனைத்து உறுப்புகளும் ஸ்ரீஹரிக்கென்றே

இருக்கின்றன என்று வேண்டிக்கொண்டது நினைவுக்கு வருகிறது. தாச சாகித்யத்தில் இந்த மாதிரியான சிந்தனை, வேண்டுகோள் பல பாடல்கள் மூலமாக இருக்கிறது. 'பேடிதரே என்னொடயன பேடுவே | பாடிதரெ என்னொடெயன பாடுவே' என்று தாசர் சொன்னது போல, ஸ்ரீஹரியையே சரணடையவேண்டும். அனைத்து ஜீவராசிகளும் அவனின் சேவகர்கள், கட்டளைக்கு கீழ்ப்பட்டவர்கள்.

இப்படி அனைத்தும் உனக்காக, உனதே ஆகும் - என்னும் சிந்தனை எப்போதும் நம் மனதில் இருக்கவேண்டும். 'கெரெய நீரனு கெரெகெ செல்லி' என்றதுபோல, அனைத்தையும் அவனுக்கே சமர்ப்பித்து உன்னைப் பற்றிய அறிவை ; கூடவே பக்தி, வைராக்கியங்களை எனக்குக் கொடு என்று வேண்டிக்கொள்ள வேண்டும்.

**பால்குண பகுள சப்தமி**

**ஜீவன யக்ஞம்**

சாஸ்திரங்களில், மனிதனின் ஆயுள் 116 ஆண்டுகள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது 42,340 நாட்கள். 1016160 மணி நேரம். இதை ஜகன்னாததாசர் தமது ஹரிகதாம்ருதசாரத்தில் விளக்கியது இவ்வாறு:

கவிகளிந்தலி திளிது ப்ராத:
சவன மாத்யந்தினவு சாயம
சவனகள வசு ருத்ர ஆதித்யரொளு ராஜிசுவ |
பவனனொளு க்ருதி ஜய சுமாயா
தவன மூர்த்தித்ரயவ சிந்திஸி
திவசவெம்பாஹுதி களிந்தர்ச்சிசுத சுகிசுதிரு || (12-34)

மனித வாழ்க்கையின் ஆயுளை மூன்று பாகங்களாகப் பிரித்து, பிராத:ஸவன, மாத்யாந்தின: ஸவன மற்றும் சாயம்-ஸவன என்று அறிந்து, இந்த காலங்களில் வசு-ருத்ர-ஆதித்யர்கள் அபிமானி தேவதைகளாக இருக்கின்றனர் என்று அறியவேண்டும். இவர்களில் இருக்கும் முக்யபிராணரில் பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்னும் ஸ்ரீஹரியின் ரூபங்கள் நிலைத்திருக்கின்றன. இப்படியாக

நினைத்து நாட்கள் என்னும் ஆஹுதியைக் கொடுத்து, ஸ்ரீஹரியை பூஜிக்கவேண்டும்.

சதுரவிம்ஷத்யப்த வசுதே
வதெகளொளு ப்ரத்யும்னனிப்பனு
சது:சத்வாரிம்ஷதிகளலி சங்கர்ஷணாக்ய |
ஹுதஹாக்ஷரொளிஹனு மாயா
பதியு ஹதினாரதிக த்வாத்ரிம்
ஷதி வருஷகளலிப்பனு ஆதித்யரொளு சிதகாய || (12-35)

காலம் - அதிதேவதை - பகவத்ரூபம் - மந்திரம்
பிராத:ஸவன - 24 ஆண்டுகள் - வசு - பிரத்யும்ன - காயத்ரி (24 எழுத்து)
மாத்யந்தின ஸவன - 44 ஆண்டுகள் - ருத்ர - சங்கர்ஷண - த்ரிஷ்டுப் (44 எழுத்து)
சாயம் ஸவன - 48 ஆண்டுகள் - ஆதித்ய - வாசுதேவ - ஜகதி (48 எழுத்து)

ஷோடஷோத்தரஷத வருஷதலி
ஷோடஷோத்தரஷத சுரூபதி
க்ரீடிசுவ வசு ருத்ர ஆதித்யரொளு சதிசஹித |
வ்ரீடவில்லதெ பஜிப பகுதர
பீடிசுவ துரிதௌககள தூ
ரோடிசுத பளியலி பிடதெ நெலெசிப்ப பயஹாரி || (12-36)

ஸ்ரீஹரி தன் மனைவியுடன் 116 ரூபங்களில் 116 ஆண்டுகள் வசு ருத்ர ஆதித்யரில் இருந்து நிலைத்திருப்பான். தன்னை வணங்கு பவர்களின் துன்பங்களை போக்கி, சுகத்தை அளிக்கிறான். இதனை அறிந்து வணங்குபவர்களை, அவர்களின் அனைத்து பிறவிகளிலும் காத்து அருள்வான்.

**பால்குண பகுள அஷ்டமி**

**தாசரின் நற்சிந்தனை**

ஹரிதாசர்கள் வெறும் தங்களின் மேம்பாட்டிற்காக அவதரித்து வந்தவர்கள் இல்லை. சுயநலத்திற்காக இல்லாமல் பொது

நலத்திற்காகவே வாழ்ந்தவர்கள். தங்கள் மதத்தின் பிரசாரம் செய்து, பிற மனங்களை தூய்மைப்படுத்தினர். வாழும் முறையை காட்டினர். ஹரிசர்வோத்தமத்வத்தை பற்பல விதங்களில் நிரூபித்து, போதித்து, சஜ்ஜனர்களை மேம்படுத்தி, ஸ்ரீஹரியை வணங்கி வழிபடுங்கள் என்று வேண்டினர். நம் நிலையை அடிக்கடி நினைவுபடுத்தினர்.

துளசியிரலு துருசியனு துருவிரோ
கங்கேயிரலு தோடித கூபதி பானவ மாடிதெ
ராஜஹம்ஸவிரலு கோ எந்து கூகுவ கோளிகெ ஹாலெரெதெ
பாவன்னவிரலு பேவின நெளரளொளகொரகிதெ
தாயி யாரி தோத்தனுதருவ மானவனந்தெ
புரந்தரவிட்டல நீனிரலன்யத்ர தெய்வங்கள எணிசதெ ||
-- ஸ்ரீபுரந்தரதாசர்

உண்மையை அறியாமல், தேவையற்ற விஷயங்களுக்கு முக்கியத்துவத்தைக் கொடுக்கும் நாம் அடுத்து செய்யவேண்டியது என்ன என்பதை ஸ்ரீவிஜயதாசர் கொடுக்கும் தீர்வு இது.

ஹரிநாம இல்லதல்லி ஹருஷவெ எந்திகு
சுராதிகளு பல்லரு பஹுகாலதி
நிரயரு கேளிதரு கடெ ஹாகுவுது ஆ
தரதிந்த பாலிஸி பரம ப்ரீதியிந்த
நிருத ஞான பகுதி வைராக்ய கொடுவுது
பரிதாகம காணோ தும்பித்த பண்டார
பிரிதாகி எந்தெந்த தரெய ராயரனெல்ல
அரெக்ஷணதல்லி காயிது காயிது
தரணி பாலக நம்ம விஜயவிட்டலரேய
ஹொரகெ ஒளகெ இத்து ஆனந்தபடிசுவ || --ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீகோபாலதாசரின் சிறந்த சிந்தனை இவ்வாறு:

பேடுவெனோ நானொந்து பேடதக்குத தேவ
நீடெனெம்புது நின்ன மனதொளத்தி
மோடலாத்ரீஷ கோபாலவிட்டலரேய
பேடதந்ததி பாரு மாடய்ய தொரெயெ ||

## பால்குண பகுள நவமி

## தசான்ன சமர்ப்பணம்

ஸ்ரீவிஜயதாசர், தமது சப்தான்ன ப்ரகரண சுளாதியில், அன்ன நாமக அனிருத்தனே அனைவருக்கும் ஜீவனைக் கொடுப்பவர் என்கிறார். ஜடமான அன்னத்தினால், ஜடமான இந்த உடல் வாழ்கிறது. மேலும் பல விஷயங்களை விவரிக்கிறார். பிரசன்னவேங்கட தாசரும் இன்னொரு கிருதியில் இந்த தஷான்னங்களைப் பற்றி விளக்குவது இப்படி.

ஸ்ரீவதூதவகெ நைவேத்ய கொடுவெ சதத
பாவசுத்தியலி மனோவாக்காயதிம் ||ப||

ப்ரதமான்ன ஸ்ரீஹரிய பக்திகாமன தீக்ஷெ
த்விதியான்ன ஸ்ரீஹரிய சேவா சங்கல்ப
த்ருதியான்ன ஸ்ரீஹரிய மஹிமாதிஷய ஞான
சதுர்த்தான்ன ஹரிகுணாதிசய அறியலு ஆசக்தி ||1||

ஐதனே அன்ன ஹரி சேவெயலி தைர்ய மத்தாத
ரத பகவத்தர்ம ஆரனேயன்ன |
மாதவன குண விவேகதி த்யாக ம்ருஷ்டான்ன ||2||

ஹீகெ மனோராபன்ன சர்வேஷ வாக்கதி ஹ
ரி குணெளககள கவன நவமான்னதிந்த |
ஈ கேஹ தேஹ ப்ராணார்பணெயலி உதார
நாகுவதெ ப்ரசன்ன வேங்கட கிருஷ்ணகெ தஷான்ன ||4||
-- ஸ்ரீபிரசன்னவேங்கட தாசர்

தனது அற்புதமான கற்பனையினால் தாசர் இங்கு விஷயத்தை விளக்குகிறார். மனது, வாக்கு மற்றும் உடலினால் ஸ்ரீஹரிக்கு அர்ப்பிக்கப்படும் அன்னரூப நைவேத்தியம் இதுவே. பகவந்தனே கொடுத்த அனைத்தையும், அவனுக்கே நற்சிந்தனையுடன் அர்ப்பித்தால், ஸ்ரீஹரி அதனால் ப்ரீதியடைகிறான்.

அன்ன நாமக ஸ்ரீஹரி அனைத்து இடங்களிலும் வியாபித்து அனைத்தையும் நடத்துபவனாக இருக்கிறான். அனைவரின்

பிம்பமூர்த்தியான ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்கும்போது, அதன் உண்மையான பொருளை அறிந்து செய்பவர்களுக்கு, ஸ்ரீஹரி நற்பலன்களைக் கொடுக்கிறான். அன்னாதி பொருட்களில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்கள், சமர்ப்பித்தவரின் பிம்பமூர்த்தி மற்றும் பூஜைகொண்ட பிரதிமைகளில் இருக்கும் ஸ்ரீஹரியின் ரூபங்களில் பேதம் இல்லையென்று நினைத்து செய்வதே நிஜமான பூஜை. இதுவே உண்மையான நைவேத்தியம்.

**பால்குண பகுள தசமி**

**நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா**

இதுவே எப்போதும் நம் மந்திரமாக இருக்கவேண்டும். உலகத்தை தனது லீலாவினோதங்களால் எப்போதும் ஆட்டுவிப்பவன் மகா விஷ்ணு. படைத்தல் முதலான அஷ்ட-கர்த்ருத்வ செய்பவன் அவனே. சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரியுடையது இல்லை என்பதே இல்லை. ரமா பிரம்மா ருத்ர இந்திராதி அனைத்து தேவதைகளும் அவனுக்கு கீழ்ப்படிந்தவர்களே. அவனின் சேவகர்களே. இதையே ஸ்ரீவிஜயதாசர்:

ஹரியே நின்னாதீன ஞானேந்திரியகளு
ஹரியே நின்னாதீன கர்மேந்திரியகளு
ஹரியே நின்னாதீன பஞ்சபூதாத்மகளு
ஹரியே நின்னாதீன மன சித்தாதிகளு
ஹரியே நின்னாதீன சகல சேதனவு
ஹரியே நின்னாதீன சகல சேஷ்டெகளு || -- ஸ்ரீவிஜயதாசர்

அனைத்தையும் படைத்தவனான ஸ்ரீஹரி, அனைவரின் பிம்ப மூர்த்தியாகி, அனைத்தையும் நடத்துபவனும் அவனே ஆகிறான். அதற்கே, பக்தன் எனப்படுபவன் கேட்கவேண்டியது இதை.

நின்ன சித்தக்கெ பந்ததனு மாடு சர்வேஷ |
என்ன ஸ்வாதந்த்ர, லவமாத்ர உண்டே ஸ்வாமி ||

மேலும், எனக்கு அருளி, சாதனைக்கு வழி செய்யுமாறு என்னை நல்வழிக்கு செலுத்து என்றார்.

குணிஸிதரெ குணிவே நகிஸிதரெ நகுவெ
மணிஸிதரெ மணிவெ அளிஸிதரெ அளுவெ
உணிஸிதரெ உணுவெ உடிஸிதரெ உடுவே
மனுஜவேஷனெ சிரிவிஜயவிட்டல நீனே
தணிஸிதரெ தணிவெ நெனெவித்தரெ நெனெவே ||

சித்தாந்தத்தின் முக்கியமான பிரமாணமான 'நா அஹம் கர்த்தா ஹரி: கர்த்தா' என்பது அனந்த காலத்திலிருந்து வரும் உண்மையான செய்தி.

ஹரிசித்த சத்ய | நரசித்தக்கெ பந்துது லவலேஷ நடெயது || என்றார் தாசர்.

சோஹம் பாவகளனு பிட்டு தாசத்வ கொடோ |
அடிகடிகெ சிந்திஸி படவாகுவுத்யாகே |
ஒடெய நீனே கதியோ விஜயவிட்டல ஸ்வாமி ||-- ஸ்ரீவிஜயதாசர்

**பால்குண பகுள ஏகாதசி**

**ஆத்ம சமர்ப்பணம்**

நரரொளகெ பாமரனு நா இஹபரக்கெ சாதவரியெ ஸ்ரீஹரியே |
ஷரணு ஹொக்கெ நின்ன சரணகமலகெ கருணதிந்த நின்ன ஸ்மரணெ எனகித்து || - ஸ்ரீபுரந்தரதாசர்

பற்பல பிறவிகளை எடுத்து வந்த ஜீவன், பல கஷ்டங்களை அனுபவித்து வந்திருக்கிறான். அடுத்து நடக்கப்போவதையும் அறியான். அப்படிப்பட்டவன் ஸ்ரீஹரியிடம் எப்படி தன்னை அர்ப்பணித்து அடிபணிய வேண்டும் என்பதை தெரியாமல் இருந்தபோது, தாசர் இந்த வார்த்தைகளை நம்முன் வைக்கிறார். ஸ்ரீஹரியே ஈசன், நான் அவனின் தாசானுதாசன் என்பது மனதில் அடிஆழத்திலிருந்து வரவேண்டும். அப்போது மட்டுமே நான் பாமரன் / சாதாரணன் என்னும் சிந்தனை இருக்கும்.

தேலிஸோ இல்ல முளுகிஸோ நின்ன
காலிகே பித்தேனோ பரமக்ருபாளோ ||

என்று ஸ்ரீஹரியிடம் ஆத்ம நிவேதனம் செய்யவேண்டும். 'அன்யதா சரணம் நாஸ்தி த்வமேவ சரணம் மம' என்று அடிபணிய வேண்டும். இதுவே சமர்ப்பண பாவம். தாசர், மேலும்:

சதிசுத தனதாசே எந்தெம்ப மோஹதி
ஹிததிந்த அதினொந்து பெண்டாதேனோ
கதிய கொடுவவர காணே மதிய பாலிஸோ லக்ஷ்மி
பதி நின்ன சரணவ ஸ்மரணே இத்தெனகே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

தாசர் ஸ்ரீஹரியிடம் வேண்டியது, நம் அனைவரின் மனவோட்டமாக இருக்கிறது.

நானா தேஷகளல்லி நானா காலகளல்லி
நானா யோனிகளல்லி அளிது புட்டி
நானு நன்னது எம்ப நரகதொளகெ பித்து
நீனே கதியெந்து நம்பித தாசன மேலே... இன்னு தய பாரதே ||

இப்படி தாசர் வேண்டியது, அனைத்து சஜ்ஜனர்களுக்குமான செய்தியானது. ஸ்ரீஹரியிடம் தன் அனைத்தையும் அர்ப்பித்துக் கொள்வது சத்கதிக்கு சாதனையாகும். வேறு யாரிடமும் இத்தகைய சிந்தனை இருக்கக்கூடாது என்றார்.

**பால்குண பகுள த்வாதசி**

**தேவ - குரு வணக்கம்**

ஆசார்ய மத்வரின் சித்தாந்தத்தின் முக்கிய தத்வம் - தாரதம்யம். ஸ்ரீஹரியிடமிருந்து துவங்கி அனைத்து தேவதைகளையும், குரு பரம்பரையையும் தாரதம்யத்தின்படி வணங்குவது சாஸ்திரத்தில் சொல்லியபடியே ஆகும்.

யஸ்ய தேவே பராபக்திர்யதா தேவே ததா குரௌ |
தஸ்யைவ கதிதாஹ்யர்தா: ப்ரகாஷந்தே மஹாத்மன: ||

இந்த வழியில் தேவகுரு வணக்கத்தை ஹரிதாசர்கள் செய்து, நம்மையும் செய்யுமாறு கூறினர்.

விஷ்ணு சர்வோத்தமனு ப்ரக்ருதி க

னிஷ்டளெனிபள அனந்தகுண பர
மேஷ்டி பவனரு கடிமெ வாணீ பாரதிகதம ।
விஷ்ணுவஹன பணீந்த்ர ம்ருடரிகெ
க்ரிஷ்ண மஹிஷியரதம இவரொளு
ஸ்ரேஷ்டளெனிபளு ஜாம்பவதியாவேஷ பலதிந்த ॥ (29-1)

குரு மத்வராயரிகே நமோ நமோ ।
நம்ம குருமத்வ சந்ததிகே நமோ நமோ ॥
ஸ்ரீபாதராஜரிகெ குரு வியாசராஜரிகெ ।
குருவாதிராஜரிகெ நமோ நமோ ॥

ராகவேந்திர ராயரிகெ வைகுண்ட தாசரிகெ ।
புரந்தரதாசரிகெ நமோ நமோ ॥
குருவிஜயராயரிகெ பாகண்ண தாசரிகெ ।
ஸ்ரீரங்கவலித தாசரிகெ நமோ நமோ ॥

பரம வைராக்யசாலி திம்மண்ண தாசரிகெ ।
ஹுண்டேகார தாசரிகெ நமோ நமோ ॥
குருஸ்ரீசவிட்டலன பரம பக்தர சரண ।
சரசிஜ யுககளிகெ நமோ நமோ ॥ -- ஸ்ரீஸ்ரீசவிட்டலதாசர்

பாகஷாசன முக்ய சகல தி
வௌகசரிகபி நமிபெ ருஷிகளி
கேக சித்ததி பித்ருகளு கந்தர்வ க்ஷிதிபரிகெ ।
ஆ கமலனாபாதி யதிகள
நீககானமிசுவேனு பிடதெ ர
மாகளத்ரன தாசவர்க்கெ நமிபெ அனவரதா ॥ (1-12)

ப்ருத்விமண்டல மத்யஸ்தா: பூர்ணபோத மதானுகா: ।
வைஷ்ணவா: விஷ்ணு ஹ்ருதயா: தான் நமஸ்தே குரூன் மம ॥

**பால்குண பகுள த்ரயோதசி**

## ஹயவதனனுக்கு ஆரத்தி

உலகத்தில் ஆரத்திக்கு அருகதை பெற்றவர் ஸ்ரீஹரி ஒருவரே. தீபங்கள் வைத்து செய்யப்படுவதே ஆரத்தி. தீபத்தின் ஒளியில்

ஸ்ரீஹரியின் தரிசனம். அவனின் தேகத்தின் தரிசனம். இதை செய்ய நமக்கு உதவுவதே ஆரத்தி. தோஷங்களே இல்லாதவர் என்றால் அது ஸ்ரீஹரி ஒருவரே. யாருக்கு ஆரத்தி எடுத்தாலும், அது ஸ்ரீஹரிக்கே எடுக்கிறேன் என்ற நற்சிந்தனை இருக்கவேண்டும். சூரியனுக்கு ஒளி கொடுத்த ஸ்ரீஹரிக்கு ஆரத்தி. இதை செய்வதனால் நமக்கு கீர்த்தி. ஸ்ரீவாதிராஜர், ஸ்ரீஹரியின் தசாவதார ரூபங்களுக்கு எடுத்த ஆரத்தி இதுவே.

ஆனந்த மயகெ சின்மயகெ லக்ஷ்மீ
நாராயணகாரதி எத்திரே ||ப||

வேதவ தந்து பெட்டவ பொத்து தரணிய
சாதிஸி கம்பதொளுதிஸிவகெ |
பூதான பேடி ந்ருபர சம்ஹரிசித
ஆதி மூருதிகாரதி எத்திரே ||1||

இந்துவதனே சீதேசஹித கல்யாணதி
நந்தகோகுலதல்லி நலிதவகெ |
மந்தகமனெயர முந்தெ நிர்வாணதி
நிந்த மூருதிகாரதி எத்திரே ||2||

துரகவனேரி தைத்யர சீளி சுஜனர
பொரெவ மங்கள ஹயவதனனிகெ |
வரத வேலாபுர சென்னிகராயன
சரணகமலகெ ஆரதி எத்திரே ||3||

சச்சிதானந்த விக்ரகனான ஸ்ரீலட்சுமி நாராயணனுக்கு ஆரத்தி எடுங்கள் என்று செய்தி சொல்கிறார். தூப தீப ஆரத்தி மங்களாரத்தி ஆகியவை ஸ்ரீஹரிக்கு நாம் கொடுக்கும் உபசாரங்கள். பக்திகளில் இது ஒரு வகை. எந்தவொரு பக்தியை வெளிப்படுத்தினாலும், ஸ்ரீஹரியின் உறுப்புகளில், அவதாரங்களில், குணங்கள் வேறுபாடு இல்லை என்று நினைக்கவேண்டும். ஸ்ரீஹரியின் தசாவதார சிந்தனையை ஸ்ரீவாதிராஜர் இங்கு மிகவும் அழகாக, சுருக்கமாக நமக்குக் கொடுத்திருக்கிறார்.

பெண்கள் எந்தவொரு விசேஷமான சந்தர்ப்பங்களிலும் ஆரத்தி எடுக்கும்போது இந்தப் பாடலை சொல்லலாம். இது ஒரு மங்கள பாடலும் ஆகும். பகவந்தனின் ரூபங்களை சிந்திப்பது எப்போதும் மங்களத்தையே தரும். நம் நற்சிந்தனையும் முன்னர் சொன்னதுபோல இருந்தால், ஸ்ரீஹரியின் கிருபைக்கு பாத்திரராவோம்.

**பால்குண பகுள சதுர்தசி**

## ஹரிதாசர்களின் செய்தி

ஹரிதாசர்கள் தொடர்ந்து பல்வேறு செய்திகளை தந்து கொண்டிருக்கின்றனர். மனிதனின் அனைத்து நிலைகளுக்கும் / பிரச்னைகளுக்கும் ஹரிதாசர்களின் செய்தி அருமருந்தாக செயல்பட்டு வருகிறது. தாம் மேம்பட்டு, மற்றவர்களையும் மேம்படுத்தி பக்தி செலுத்தினர். ஹரிதாசர்களின் பார்வை அனைத்து வர்க்கத்தவரும் பயன்படக்கூடியது. கேட்டால் மகிழ்ச்சி, பாடினால் மகிழ்ச்சி, அனுபவித்தால் மிகவும் மகிழ்ச்சி. அதையே பின்பற்றினால் அதைவிட மகிழ்ச்சி.

ஸ்ரவண மனகானந்த வீவுது
பவஜனித துக்ககள களெவுது
விவித போககளிஹ பரங்களலித்து சலஹுவுது || -- ஸ்ரீஜகன்னாததாசர்

தூய்மையான நற்செய்திகளை தருவதற்கென்றே அவதரித்து வந்த மகாத்மா ஹரிதாசர்கள். கேட்பது, கேட்டு பின்பற்றுவது, பின்பற்றி அதையே நடைமுறைக்கு கொண்டுவருவது இறுதியில் ஸ்ரீஹரியின் வசமாவது என்பது நம் வழக்கமாக இருக்கவேண்டும். ஹரிதாசர்களின் செய்தியின் தொகுப்பினை அவரிடமிருந்தே கேட்போம்.

குரு முக்யவிரபேகு, ஹரிதெய்வவென்ன பேகு
பரி உபகார இரபேகு ப்ரதிக்ஷண
பரரு தன்னவரு சமரெந்து திளியபேகு
ஹிரிம ஹிக்கதெ தானஸ்வதந்த்ர நென்னபேகு

பரமாணு ஸ்தளதல்லி ஹரிவியாப்தனென்னபேகு
ஈ பரியலி திளிதரெ அவனே முக்தியோக்ய
சிரியரமண நம்ம கோபாலவிட்டலன்ன
கருணக்கெ பாத்ரனாதவனெ இதனரிவ || -- ஸ்ரீகோபால்தாசர்

ஹரிதாசர்களின் ஒவ்வொரு வசனமும், வாக்குகளும், நற்செய்திகளே. பகவந்தனில் பக்தி செய்வதற்கு இது ஒரு வழிகாட்டியாக இருக்கிறது. விஜயதாசரின் பொருள் பொதிந்த வார்த்தைகள் இவை:

ஜாலிஸபேகு ஜாலிஸபேகு ஜாலிஸபேகு
ஜாலகாரனாகி பாபஜாலங்கள கஸபோகுவந்தெ
ஜாலிஸபேகு ஜாலிஸி ஒள்ளெ வஸ்து சம்பாதிஸி
ஜாளிகெ சென்னாகி தும்பலு மாயா
ஜால விஜயவிட்டல சன்னிதியல்லி
ஜாளிகெயிட்டு ஜனன நெகபேகு ||

**பால்குண அமாவாசை**

**சர்வ சமர்ப்பணம்**

சர்வ சமர்ப்பணே மாடி முக்தனாகு
சர்வாதிஷ்டானதல்லி ஹரிய திளிது
தர்வியந்ததி சர்வ விஷயங்கொளகித்து
நிர்வாஹ கர்தனானு மனபோஷிஸி
ஓர்வனிந்தலி எல்லா சுகதுக்க விப்புதெந்து
நிர்லேபனாகி நீ திருகுதிரு
சர்வோத்கிருஷ்டமூர்த்தி விஜயவிட்டலனு
சர்வபாரரஹிஸி நின்ன பொரெவ || -- ஸ்ரீவிஜயதாசர்

இங்கு விஜயதாசர், அனைத்து செயல்களையும் பகவந்தனுக்கு அர்ப்பிக்குமாறு சாதாரண மக்களுக்கும் புரியுமாறு விளக்குகிறார்.

யத்கரோஷி யதஷ்னாதி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் |
யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ தர்ஷணம் || (கீதை 9-27)

செய்யும் அனைத்தையும் 'சமர்ப்பணம்' எனக்கே சமர்ப்பணம் செய் என்று ஆணையிட்டான் ஸ்ரீகிருஷ்ணன். இதையே அனைவரும் நற்சிந்தனையுடன் செய்யவேண்டும். அர்ப்பணம் என்றால், நம்மிடம் இருக்கும் பகவந்தனின் ரூபங்களை நினைத்து, அவனில் வேறுபாடு இல்லை என்று நினைப்பதே ஆகும். எதுவும் என்னுடையதில்லை என்ற மனோபாவத்துடன் ஸ்ரீஹரிக்கு அர்ப்பிப்பதே இந்த சமர்ப்பணம்.

த்வாதச ஸ்தோத்திரத்தில் ஸ்ரீமதாசார்யர் 'அக்ஷயம் கர்ம யஸ்மின் பரே ஸ்வர்ப்பிதம்' - பக்தியுடன் ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்த கர்மங்கள் அக்ஷயம் ஆகிறது என்கிறார். அதற்கே ஸ்ரீகிருஷ்ணன் - எனக்கு அர்ப்பியுங்கள். பலனைப் பெறுங்கள் - என்றான்.

ஏனு மாடுவ கர்மகளு லகு
மீ நிவாஸனிகர்ப்பிசலு சன்
தான பூர்வகதிந்த சந்தேஹிசதெ அனுதினதி || -- ஸ்ரீஜகன்னாததாசர்

நற்சிந்தனையுடன் செய்த எந்தவொரு செயலையும் - அது மிகச் சிறிய செயலாகட்டும், தோஷங்கள் உள்ள செயலாகட்டும், நல்ல மனதுடன் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க வேண்டும். புல் மற்றும் தண்ணீரைக் குடிக்கும் பசு சுத்தமான பாலைக் கொடுப்பது போல, ஸ்ரீஹரி நமக்கு சுகத்தைக் கொடுப்பான்.

கெரெய நீரனு கெரெகெ செல்லி வரவ படெதவரந்தெ காணிரோ
ஹரிய கருணதலாத பாக்யவ ஹரிசமர்ப்பணெ மாடி பதுகிரோ
சிரி புரந்தரவிட்டலராயன சரணகமலவ நம்பி பதுகிரோ ||
-- ஸ்ரீபுரந்தரதாசர்

சமர்ப்பிப்பது என்றால் பக்தியுடன் பகவந்தனிடம் ஒப்படைப்பது. உடலால், மனதால், வாக்கினால் அவனை வணங்குவது. நம் கர்ம பலன்களை அதாவது, சத்கர்மங்களினால் தோன்றிய ஸ்ரீஹரியின் ரூபங்களை அதே பகவந்தனில் ஐக்ய சிந்தனையை செய்ய வேண்டும்.

ஞான கர்மேந்திரியங்களிந்தேனேனு மாடுவ கர்மகளு ல
க்ஷ்மீ நிவாஸனிகர்ப்பிசுதலிரு காலகாலதலி || -- என்று ஜகன்னாத தாசர் சொன்னதுபோல, இந்த மிகப்பெரிய செயலினால் கிடைக்கும்

ஹரிவாயுகுருகளின் அருள், புண்ணியம் ஆகியவற்றை அந்த ஸ்ரீஹரிக்கே சமர்ப்பிக்க வேண்டும்.

விதிவாக்யானு சாரேண க்ருதம் விஷ்ணௌ சமர்ப்பயேத் ।
ததா நிஷேதத்ஸ்யதான் சர்வாம்ஸ்தஸ்யை சமர்ப்பயேத் ॥ -- யோகதீபிகா

சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட செயல்களை செய்து, ஸ்ரீஹரிக்கு சமர்ப்பிக்க வேண்டும். தடை செய்யப்பட்ட செயல்களை விடுவதன் மூலம் சமர்ப்பிக்க வேண்டும். பகவந்தனின் கருணைக்கு பாத்திரராவோம்.

காயேன வாசா மனசேந்திரியைர்வா
புத்யாத்மனா வா ப்ரக்ருதி ஸ்வபாவாத் ।
கரோமியத்யத் சகலம் பரஸ்மை
நாராயணாயேதி சமர்ப்பயாமி ॥

॥ ஸ்ரீஹரிதாசாந்தர்கத மத்வேஷார்ப்பணமஸ்து ॥

***

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**